# ஞானசம்பந்தம்

தருமை ஆதீனத் திங்கள் இதழ் தனிப்பிரதி ரூ. 5.

மலர் 66 ] சர்வஜித்து - ஐப்பசி - 20—11—2007 [ இதழ் 12




## கந்தசஷ்டியை முன்னிட்டு

(15—11—2007 வியாழக்கிழமை)





திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான
வைத்தீஸ்வரன்கோயில்
ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி காட்சியருள்கிறார்

தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ
குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

ஏதேது செய்திடினும்
  ஏதேது பேசிடினும்
ஏதேது சிந்தித்
  திருந்திடினும் — மாதேவன்
காட்டிடுவ தானவருட்
  கண்ணைவிட்டு நீங்காது
நாட்டம் அதுவாய் நட.

— சிவபோகசாரம் 76

ஆசிரியர் :-
முனைவர்
குமாரசாமித் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
வித்துவான்
வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமை ஆதீனத் திங்கள் இதழ்

மலர் 66 | 20-11-2007 | இதழ் 12

## உட்பொருள்





உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமை ஆதீனத் திங்கள் இதழ்

மலர் 66 இதழ் 12

சர்வஜித்து – ஐப்பசி – 20–11–2007

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடல்ஆல வாயிலாய்!
நின்தயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— திருஞானசம்பந்தர்

## ஐம்முகக் கடவுள்

சைவசித்தாந்தக்கலாநிதி,

சிவத்திரு. அ. சொ. சுப்பையா, எம்.ஏ.,

51/23, 2-வதுமாடி, திருப்பாட்டன்தெரு, சிதம்பரம்.

( மலர் 66 இதழ் 11 பக்கம் 486 இன் தொடர்ச்சி )

**ஊனப் பாலும். ஞானப் பாலும் :**

அன்னை ஆன்மாக்களுக்குப் பால் ஊட்டுகிருள். சிலருக்கு அஃது ஞானப்பால். பலருக்கு ஊனப்பால். இஃது *சாத்திரங்களில்* சத்தி நிபாதம் எனப் போற்றப்பெறுகிறது. இஃது மந்ததரம். மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்படும் என்பர்.

திருக்கயிலையை ஒத்தது நம்பெருமூளை எனவும் அஃது அம்மை-அப்பரின் செயலகம் எனவும் அதன் அடியில் உள்ள தலைமைச்சுரப்பி அம்மையின் இருப்பிடம் (அல்குல்) எனவும் முன்னர்க் கண்டோம். அங்கு நம் உடல் நலத்துக்கும், மன வளத்துக்கும், ஆன்ம உய்திக்கும் ஏராளமான ஊட்டச்சத்துக்கள் உற்பத்தியாகின்றன. அவை பிட்யூட்டரி என்னும் தலைமைச்சுரப்பி (Pituitary, the master endocrine gland) மூலம் உடலின் பல பாகங்களுக்கும் வந்து சேர்கின்றன.

சுத்தமாயையினலானசிவதத்துவங்கள் ஐந்தும் சிரசினுள் அமைந்துள்ளன. பிட்யூட்டரி என்பது சுத்தமாயையின் கடைசித்தத்துவமான சுத்தவித்தை பிட்யூட்டரி சிரசின் நடுவில் பெருமூளைக்குக் கீழ்மையத்தில் ஹைப்போதாலமஸ் என்னும் உறுப்புக்குக் கீழே அமைந்துள்ளது. ஆகவே மருத்துவர்களும் பிட்யூட்டரியை ஹைப்போ-ஃபிஸிஸ் (Hypophysis) என அழைப்பர்.

## ஊழில் பெருவலி யா உள ?:

உயிர்கள் எண்ணற்றவை. அவற்றிற்கு அமைந்துள்ள உடம்புகளும் அவை நுகரும் இன்பத்துன்பங்களும பலவிதமாக வேறுபடுகின்றன. அதற்குக் காரணம் அவற்றைப் பந்தித்துள்ள மும்மலங்களே என்பது சைவ ஆகமக் கருத்து. மும்மலக்கட்டின் வன்மை மென்மைகளுக்கு ஏற்பவே அன்னை ஊனப்பாலையோ, ஞானப் பாலையோ ஊட்டுகிருள் என்பது உணரற்பாலது.

“சாத்திரங்கள் கூறும் இக்கருத்திற்கு அறிவியல் ஆதாரம் உண்டா ?” என்பது பலரது வினு. அதற்குரிய விடையை உடற்கூற்று அறிவியல் பின்னணியில் ஈண்டுச் சிந்திக்கலாம்.

## ஆக்ஞை ஆதாரம் :

மூளையும் முதுகந்தண்டும் இணைந்தகட்டமைப்பை அறிவியலார் மைய நரம்பு மண்டலம் (Central nervous system) என அழைப்பர். இதனை சிவபூமி என வாழ்த்துகிருர் திருமூலர். (மேரு நடுநாடி, மிக்கு இடைபிங்கலை எனத் தொடங்குகிறது அத்திருமந்திரம்)

இறைவன் நம் உடம்பின் மைய நரம்பு மண்டலத்தில் அமர்ந்து அருள்பாலிக்கும் ஆதாரத்தானங்கள் ஆறு. மூலாதாரத்தை முதன்மையாக்கொண்டு, சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விகத்தி என்பன ஐந்தும் முதுகந்தண்டில் அமைந்துள்ளன. சிரசினில் உள்ள பிட்யூட்டரி என்னும தலைமைச்சுரப்பியே ஆருவது ஆதாரம். இதற்கு ஆக்ஞை என்பது பெயர் ஆணைத்தானம் என அழகுதமிழில் குறிப்பர். ஹம், க்ஷம் என்ற இரண்டு நுண்ணிய ஒலிகள் ஆக்ஞை என்னும் இந்த ஆதாரத்திலிருந்து எழுவதாக அருளாளர் கூறுகின்றனர்.

சிவபெருமானின் சங்கற்பத்தையே ‘அவன் தனக்கு இட்ட ஆணை’ என ஏற்று உலக இயக்கத்தைத் தன் ஆணைவழிச் செலுத்துவதால், அன்னை சிவசத்திக்கு ஆணை என்பது பரியாய பெயர் அவளுடைய இருப்பிடத்துக்கும், ஆணை (ஆக்ஞை) என்னும் பெயர்தான் எத்துணை பொருத்தம் !

நாம் மனம், மொழி, மெய்களால் ஈட்டுகிற அனைத்து வினைகளும் நம் கணக்கில் பதிவாகிச் சஞ்சிதமாகக் குவிந்துகிடக்கின்றன. அவற்றிற்கு உரிய விளைவுகளை நாமே அனுபவிக்க வேண்டும் என்பது சைவநியதி. ஆகவே அவ் வினைத்தொகையிலிருந்து சிவபெருமான் ஒரு சிறு கூறினை இப்பிறப்பில் நாம் நுகர்ந்து கழிப்பதற்காகத் தருகிறான். உயிர்களாகிய நமக்கு உடம்பு என ஒன்றைத் தரும் போதே, அதனைச் சிரசின் அறிவுத்தானமாகிய மூளைக்குக் கீழே ஹைப்போதாலமஸ் என்னும் 'தாமரைக்காம்பி'ல் பிராரத்தமாகப் பதிவு செய்கிறான்.

## தலைவிதி :

சைவ – சாத்திர நூலார் மூலப்பிரகிருதி என்றும் அவ்வியக்த குணசரீரம் என்றும் பலவாருகமொழிகிற சித்தம் என்னும் உறுப்பே நம் சிரசில் ஹைப்போதாலமஸ் ( Hypothalamus ) என்னும் பெயரோடு செயற்படுகிறது. இஃது தனி ஒரு நூலாகச் சிந்திக்கத்தக்க முக்கியத்துவம்வாய்ந்தது. சுருங்கக்கூறின், இன்பத்துன்ப நுகர்ச்சிக்கான காலநியதிக் குறிப்புக்களைக் கொண்டிருப்பதாலும், தலையில் வரைந்திருப்பதாலும் இதனை ஊழ்வினைகளின்பதிவேடு என்றோ தலை எழுத்து என்றோ, ( Slate of Destiny ) தலைவிதி என்றோ கூறுதல் பொருந்தும். இதனை ஆதாரமாகக் கொண்டுதான் சிவசத்தி நமக்கு உடலின் அமைப்பையும், உள்ளத்தின் பண்பையும் உருவாக்கிக், கால-நியதிப்படி இயக்குகிறாள். ஆணை என்னும் பரியாயபெயருடைய அன்னைக்கு இஃது 'கை-ஏடாக' இருப்பதால்தான், 'ஆணையின் இருவினை' எனச்சிவஞானபோதம் இரண்டாம்சூத்திரம்இயம்புகிறது.

(ஹைப்போதாலமஸ் என்பது மூன்று உறுப்புகளின் கூட்டமாய் மும்மலங்களுக்கும் இடமாக அமைக்கப்பட்டுள்ளது. இதன் விரிவான விளக்கத்தை இவ் ஆசிரியரின் 'விதியை மதியால் வெல்லலாம்' என்னும் பாரதிதாசன் பல்கலைக்கழக வெள்ளி விழா வெளியீட்டு 350 பக்க நூலில் காணலாம்.)

நாம் செய்த வினைகளின் பயன் நம்மால் நுகர்ந்து கழிக்கப் பட்டால்தான் ஆன்மாவுக்கு இறைமையின் இன்பவாழ்வு சித்திக்கும் ஆகவே அவற்றையும் கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டிய கட்டாயம் அன்னைக்கு ஏற்படுகிறது.

ஹைப்போதாலமஸ் என்னும் உறுப்பும் ஊட்டச் சத்துக்களைச் சுரக்கிறது. அவையும் பிட்யூட்டரியை வந்து சேர்கின்றன. ஏனைய ஊட்டச்சத்துக்களோடு இந்த வினைப் பயனுகிய ஊட்டத்தையும் பிட்யூட்டரி ஏற்றுப் பிற இடங்களுக்கு அனுப்புகிறது. பதிவிலுள்ள நல்வினை தீவினைக்கு ஏற்பவே இன்பத்துன்ப வேறு பாட்டோடு அன்னை அவற்றை நமக்கு ஊட்டுகிறாள்.

இறைவன் நடுவுநிலைமையாளன். அவனுடைய கருணைப் பொழிவில் வேறுபாடு இல்லை. பெருமூளையிலிருந்து அவன் அனுப்புகிற ஊட்டச்சத்திலும் மாற்றம் ஏதும் இல்லை. ஆகவே ஹைப்போதாலமஸ் என்னும் வினைப்பதிவேட்டிலிருந்து வருகிற ஊட்டச்சத்தே அனைத்து வேறுபாடுகளுக்கும் காரணம் என்பது தெளிவு.

நல்ல உடல் நலம்மிக்க குழந்தைக்கு அறுசுவை உண்டியை ஊட்டுகிற அன்னை, நோயால் வாடும் மகவுக்குக் கைப்புமருந்தினைக் கொடுக்கிருள். அதுதானே அக்குழந்தைக்கு நன்மை பயக்கும்? அதேபோல், வினையின் நீங்கிய தெளிந்த அறிவினர்க்கு ஞானப்பாலை ஊட்டுகிற அம்மை. மும்மலக் கட்டுடையார்க்கு அம்மல நீக்கம் கருதி ஊனப்பாலை ஊட்டுகிருள். மருந்தா ? விருந்தா ? என்பதெல்லாம் ஆன்மாவின் மலக்கட்டினைப் பொறுத்ததேயன்றி அன்னையின் விருப்பு வெறுப்பால் அன்று.

### முக்கட்செல்வர் :

சிவபெருமானை 'முக்கட் செல்வர்' எனச் சாத்திரங்கள் மட்டுமன்றிச் சங்க இலக்கியங்களும் முழங்கும். மூன்று கண்களை உடைய பரம்பொருள் என்பது கருத்து. அவருடைய வலது கண் சூரியன், இடது கண் சந்திரன், நெற்றிக்கண் அக்கினி, மூன்ருவது கண்ணை ஞானக்கண் எனப்போற்றுவது மரபு. அக்கண்ணைக்கொண்டு அவன் அழித்தல் மட்டுமன்றி ஆக்கலும் நிகழ்த்துவான். அவனுடைய உள்ளீட்டு அருட்சத்தியான உமையம்மை ஞானமே வடிவானவள் அவளைக்கொண்டுதான் அவன் ஐந்தொழில் இயற்றுகிருன். ஆகவே நம் உடம்பில் அவளுடைய (அல்குல்) இருப்பிடமாகிய பிட்யூட்டரி அவனுக்கு ஞானக்கண் ஆகிறது.

முருகப்பெருமான் தோன்றுவதற்குக்காரணமான ஆறு திருமுகங்களுள் பிட்யூட்டரி என்ற அதோமுகமும் ஒன்று. முகம் என்ருலே கண், காது முதலிய ஞானேந்திரியங்கள் இருக்கும் சிவபெருமானுடைய அதோமுகத்து நெற்றிக்கண்ணிலிருந்து ஆறுமுகப் பெருமானின் ஆருவது திருமுகம் தோன்றியதாகப்புராணம். ஆகவே ஆறுமுகப் பெருமானே உண்மையான ஞானதேசிகன். அவனுக்குத் தோற்றுவாயாக அமைந்த பிட்யூட்டரி ஞானக்கண் என்பதும் ஏற்புடைத்து.

(தொடரும்)

# சாத்திரநூல் அறிமுகம் —
# — சிவஞான போதம்

தருமை ஆதீனப் புலவர்

**முனைவர். திரு. சு. இராஜேஸ்வரன்,**

எம். ஏ., எம்பிஃல்., பிஎச். டி.,

தமிழ்த்துறைத்தலைவர், (ஓய்வு)

ஆர். வி. எஸ். கல்லூரி, காரைக்கால்.

சிவஞானபோதம் சைவ சமயத் தெய்வீக நூல். பல்வேறு சமயக் கொள்கைகளையும் பல்வேறு சமய நூல்களையும் ஆய்ந்து செய்யப் பெற்ற தனிப்பெருநூல். தமிழ் கூறும் நல்லுலகின் ஒப்பற்ற செல்வமாகத் திகழும் தொல்காப்பியம். திருக்குறள் போல் இந்நூல் தனித் தமிழ்நூல். திருமறைஅடிப்படையில் அமைந்த இந்நூல். செய்யுளும் உரைநடையும் விரவியது அவன் அவள் அது என்றுபொதுபாலுக்கும் தனிப்பகுப்புகொண்ட பெருநூல். முப்பொருள் உண்மையும். ஒன்ருய் வேருய் உடனுய் என வரும் முக்கூறும். சைவத்திறங்களும் ஆகியவற்றை விளக்கிய தனிநூல். தண்டமிழின் மேலாம் தரமுடையது சமயக் கொள்கைகள் மற்றும் பல திறப்பட்ட சமயநூல்கள் இவற்றில் கூறப்பட்டனவற்றை நன்கு ஆய்ந்து கொள்ளுவன கொண்டு தள்ளுவதைத் தள்ளி உண்மைப் பொருளைத்தெள்ளிதின் விளக்கும் விழுமிய நூல். திட்பம், நுட்பம், ஒட்பம் தட்பம் ஆகிய நலங்களுடன் திகழ்வது. தத்துவ நூல்களுள் தலையாயது பல அதிகரணப்பாகுபாடுஉடையது. ஒவ்வோர் அதிகரணமும் தன்னுற் கூறப்பெறும் பொருள் (விஷயம்) அதன் கண் ஐயப்பாடு (சம்சயம்) அதற்குப் பிறர் கூறும் கருத்து (பூர்வ பக்ஷம்) அதனை மறுத்துரைக்கும் கொள்கைத் துணிவு (சித்தாந்தம்) ஒன்ரேடொன்றற்குள்ள இடையீல்லாத இயைபு (சங்கதி) என்னும் ஐந்து வகைக் கூறுகளையுடையது. இந்நூல் பொது. சிறப்பு என்னும் இரு பகுதிகளால் இயன்றது.

சிவபரம் பொருளின் திருக்கையில் விளங்கும் பெற்றியது. நந்தி தேவர்க்கும் சனகாதி முனிவர்களுக்கும் மணிவாசகப்பெருமானுக்கும் உபதேசிக்கப் பெற்ற சிறப்புடையது. சிறந்த சைவ சித்தாந்த ஞான முழுமுதல் நூலாக விளங்குவது, எந்நூல்களிலும் இல்லாத மேலான உண்மைகளைத் தன்பால் கொண்டுள்ளது. அத்துவிதம் பற்றிய தெளிவான கருத்தைப்புலப்படுத்துவது. சிவஞானமுனிவரது சிற்றுரையும் பேருரையாகிய மாபாடியமுடையது. எவராலும் மறுக்க

முடியாத கருத்துக்களைத் தன்பால் கொண்டுள்ளது. எச்சமய நூல் களுக்கும் தாயகமாகவும் நாயகமாகவும் விளங்கும் பெற்றியது. இது சாத்திர நூல்களுள் தலையாயது. இதனிற் சிறந்த தொன்றில்லை. பிற சாத்திர நூல்கள் எல்லாம் இந்நூலின் வழிநூல் சார்புநூல் களாகி ஒவ்வொரு பகுதியை விரித்துரைக்கும் பெற்றியனவாகும். ஆசிரியர் மெய்கண்டார். 13 ஆம் நூற்றாண்டினர்,

சிவஞானபோதம் முதலில் உள்ள காப்புச் செய்புளால் கல்லால நிழல் அமர்ந்த ஆண்டவனே பரம்பொருள் என உணர்த்தும். அவை யடக்கச் செய்யுள் உயிர் இயல்பை உணர்ந்தவர்க்கே இறைவன் இயல்பு உணரவரும் என்பதையும் அவ்வாறு உணர்ந்த அருட் செல்வர்களே எதனையும் உணர்த்தவல்லவர்கள் என்பதைஅறிவிக்கும் காப்பும் அவையடக்கமும் பாயிரமாகும். முதற்நூற்பா உலகத்தைப் படைத்துக் காத்து ஒடுக்குகின்ற ஒரு முதல்வன் உளன். அவன் அனைத்தையும் ஒருங்கே ஒடுக்கி ஒருங்கே படைக்கவல்லவன். அவன் பரமசிவனே எனவுணர்த்தும். இரண்டாம் நூற்பா அப்பரம் பொருள் உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று அவை செய்த வினைகளுக்கு ஏற்பப் பயன் நுகரும்படிச் செய்வான் எனும் இறைவன் தானும் தனது சக்தியும் என இருவகைப்பட நின்று உலகத்தை நடத்தும் என்பதும் ஆணவமலம் ஒன்று உண்டு என்பதும் முதல் நூற்பாவிலும், கன்மம், மாயா மலங்களின் உண்மையை இரண்டாம் நூற்பாவிலும் ஆசிரியர் குறிப்பால் உணர்த்தியுள்ளார். மூன்றாம் நூற்பா உயிர் உடம்பு ஐம்பொறி பிராணவாயு கருவி முதலியவற்றிற்கு வேறாய் நான் என்னும் உணர்விற்கு இடமாய் நிற்பது என இயம்பும். நான்காம் நூற்பா உயிர் ஆணவ மலத்தின் கட்டுண்டு ஐந்து அவத்தைகளையடையும் எனவும் அவ்வுயிர் அந்தக் கரணங்கட்கு வேறானது எனவும் கூறும். ஐந்தாம் நூற்பா இறைவன் உயிரால் அளந்தறியப் பெறாத சித்துப் பொருள் எனவும் அனுபவ ஞானத்திற்கு விடயமாகும் சத்துப் பொருள் எனவும் புலப்படுத்தும் ஏழாம் நூற்பா உயிர். உலகவியலில் அசத்தை அசத்தால் அறிவது போல். இறையியலில் சத்தைசத்தால் அறியும் எனவும் நான் உடம்பு எனும் உணர்வு விபரீதவுணர்வே எனவும் தெரிவிக்கும். எட்டாம் நூற்பா முத்திக்குச் சாதனம்ஞானமே எனவும் அது முதல்வன் குருவாய் வந்து உணர்த்த உணரப்பெறும் எனவும் முதல்வன் குருவாய் வருவதற்குச் சரியை கிரியை யோகங் களைச் செய்தல் வேண்டும் எனவும் மொழியும். ஒன்பதாம் நூற்பா இறைவனை பாசஞானம் பசுஞானங்களால் அறியப்படாதவன் எனவும், அசத்தாகிய பாசத்தைவிட்டு நான் யார் எனச் சிந்தித்து உணர்ந்தால் அங்கே சிவஞானம்தோன்றும் எனவும், அச்சிவஞானத் தால் இறைவனை உயிரின் கண்ணே நாடி அந்நிலையின் நெகிழாது இருக்க வேண்டும் எனவும் அறிவிக்கும். பத்தாம் நூற்பா முதல்வன் உயிரின் பின்னாக அதன் அறிவில் மறைந்து உடனாகி நின்று அதனை அறிவித்தும் செய்வித்தும் வருகின்றான்.

பதினோராம் நூற்பா இறைவன் உலகியல் இறையியல் எனும் இரண்டிலும்உயிர்க்குயிராய்நிற்கும். பேருபகாரத்தை உயிர்மறவாது உணர்ந்தால் அவ்விறைவன் மீது அன்பு பெருக. அவ்வன்பால் ஆண்டவன் வெளிப்படுவான். அவன்பால் அழுந்தி நிற்றலே பரமுத்தி நிலையெனச் சாற்றும். பன்னிரண்டாம் நூற்பா சீவன் முத்தர்கட்கு மெய்யுணர்வு - நிலைபெற அடியார் கூட்டுறவோடு திருவேடத்தையும் திருக்கோயிலையும் இறைவன் எனவே கண்டு வழிபடுதல் இன்றியமையாதது என வற்புறுத்தும். வேதாகமங்களின் உண்மை முடிவுகளை விளக்கி அருள் நூல்களாகிய திருமுறைகள் தோன்றின. அவற்றில் காணப்பெறும் அனுபவப் பயன்களும் மரபு உணர்த்துவனவாய் மெய்கண்ட நூல்களாகிய சித்தாந்தசாத்திரங்கள் தோன்றின. அம்மெய்கண்ட நூல்கள் உலகில்உள்ள அனைத்து நூல் களுக்கும் சிறந்தனவாய் முதலிடம்பெற்று விளங்குகின்றன. எனவே வேத ஆகம சாரம் திருமுறைகள். அத்திருமுறைகளின் தெளி பொருளே மெய்கண்ட நூல்களாகும். அவற்றுள் தலை சிறந்தது சிவஞானபோதம்.

செந்தமிழ் நூல் அதனைஉயர் சிவஞானபோதம் என்றும் யாரும் வெல்லாத சிவஞானபோதம் என்றும் போற்றுவர். சிவஞானபோதம் என்ற சொற்றொடர் சிவம், ஞானம், போதம் என்னும் முச்சொற் களால் ஆகியது. அது இறையருளால் வரும் அனுபூதி ஞானம் அல்லது நூல் ஆய்வால் உண்டாகும் ஆய்வு ஞானம் எனும்பொருள் தரும். மணிவாசகரை ஆட்கொள்ளும் பொருட்டு இறைவன் மானிடச்சட்டை தாங்கித் திருப்பெருந்துறையில் வீற்றிருந்தபோது வாதவூரர் இறைவன் கையிலிருந்து சுவடியாதென்று வினவ அது பொய்மையிலாச் சிவஞானபோதம் என்றருளச் சிவன், போதம் இவற்றின் பொருள் என்ன என வினவ இறைவன் நின்ற சிவம் ஒன்று, அதனைத் தேர்தல் ஞானம் ஆராய்ந்து தெளிந்து போதம் என்று விளக்கமளித்தார். இதில் உணர்த்தப்பெறுவது சித்தாந்த மாகும்.

" வேதத்தில் அந்தமும் மிக்க சித்தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போதாந்தமும்
ஓதத்தகும் எட்டி யோகாந்த அந்தமும்
ஆதிக் கலாந்தமும் ஆறுந் தாமே " (திருமந்திரம்)

இதில் சித்தாந்தம் " மிக்க " என்ற அடையுடன் உள்ளது.

" நித்தம் பரனோடு உயிருற்று நின்மலம்
சுத்த முதல் ஐந்தும் தத்துவத்தில் நீங்கிச்
சுத்தம் அசுத்தம் தொடரா வகை நினைந்து
அத்தன்பரன் பால் அடைதல் சித்தாந்தமே "

என்பது. இது சித்தாந்தம் என்பதின் பொருள் விளக்கம். இதற்கு முடிந்த முடிபு என்பது பொருள். வேதம் உபநிடதம் இவற்றில் கூறப்பெறும் முடிவினை பொருள் சித்தாந்தம். இதனைப் பின்பற்றி ஒழுகுதலின் பயனை,

“ சித்தாந்தத்தே சீவன்முத்தி சிந்தித்தலால்
சித்தாந்தத்தே நிற்பேற் முத்தி சிந்தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொருள் ஆதலால்
சித்தாந்தம் வேதாந்தம் காட்டும் சிவனையே ”

எனத் திருமந்திரம் இனிது விளக்கும்.

ஆகமங்களும், புராணங்களும் சித்தாந்தத்தையே வற்புறுத்தும். உபநிடத்தின் முடிவு சித்தாந்தம் வேதத்தின் சாரம் சித்தாந்தம் எனவும், பதி, பசு, பாசம் என்றும் இவற்றின் உண்மையினைத் தென்முகக் கடவுள் சனகாதியர்க்குச் சொன்னர் என வடமொழி ஸ்காந்தமும் கூறும். சிவஞானபோதம் உலகம் உயிர் இறைவன் இம்மூன்றை மட்டுமே கொள்ளும். இச் சிவஞானபோதம் நிலை நாட்டுவது சுத்தாத்து விதமாகும் இதனைத் தாயுமானவர்.

“ பொய் கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித
மெய் கண்டநாதன்அருள் மேவுநாள் எந்நாளோ ”

என்பர். புனிதாந்துவிதம், சுத்தாத்துவிதம் என்பது சிவாத்வைதம்.

சிவன் பண்டும் இன்றும் என்றும் உள்ளவன். அவனேபோல சைவசித்தாந்தம் என்றும் உண்டு. சிவஞானபோதம் ‘சிவமென்னும் அந்தர’ எனும் அந்தம் என்பது வேதாந்தம். அதாவது அறிவுநூல் முடிவு என்பது பொருள். தரம் மேலானது, அதனைவிட மேலானது இல்லை என்பது பொருள் ‘அந்தர’ என்பது வேதாந்தத்தில் முடிவாக உள்ளது சித்தாந்தமேயாகும்.

பிரமாணம், இலக்கணம், சாதனம் பயன் எனும் நான்கு இயல் களைக்கொண்டது மொத்தமிக முப்பத்து ஒன்பது அதிகரணங்களை உடையது. தமிழிலுள்ள பன்னிரண்டு உயிர் எழுத்துக்கள்போல பன்னிரண்டு நூற்பாக்களையுடையது. காப்பும் அவையடக்கமும் உடையது. காப்புச் செய்யுள் வஞ்சித்துறையில் அமைந்துள்ளது. அவையடக்கச் செய்யுள் வெண்பாயாப்பில் பாடப் பெற்றுள்ளது. சிறந்த சைவ சித்தாந்த ஞான முழு முதல் நூலாக விளங்குவது. தமிழ்நாட்டின் மெய்ஞானத்தை 40 வரிகளில் சுருங்கச் சொல்லி விளக்க வைக்கும் சாத்திர நூல்களில் தலைமையானது.

வரதுங்கராமபாண்டியர் இயற்றிய

# பிரமோத்தரகாண்டம்

காஞ்சிபுரம்,

சபாபதி நாவலர் எழுதிய பொழிப்புரையுடன்

( மலர் 66 இதழ் 11 பக்கம் 498 இன் தொடர்ச்சி. )

இங்கிவடா னிவ்வண்ண நையவிகல் வேந்தன்
பொங்குதுயர் மாதவராற் போக்கியுளந் தெளிந்து
திங்கடிரு வாண்முகத்துச் சீமந்தனியுறையு
மங்குறெடு சென்னிமணிக் கோயில்வந் தடைந்தான். 67

இ-பொ :- சீமந்தனியானவன் இவ்வாறு துயரப்பட்டுக்கொண்டிருக்க பலமுள்ள ராஜனனவன் தனக்குண்டான துயரத்தைமுனிவர்களால் நீங்கி மனந்தெளிந்து சந்திரனையொத்த அழகினையும் ஒளியினையும் பொருந்தியமுகத்தினியுடைய சீமந்தனியிருக்கும் மேகத்தையளாவுகின்ற சிகரத்தையுடைய ரத்தினங்கள் பதித்த மாளிகையிற் சேர்ந்தான் எ-று.

தாதையக்கண் டுள்ளந் தளரா வடிவீழ்ந்த
மாதினைத்தன் கையாரவாங்கி யெடுத்தணைத்துப்
பூதலத்து யாவர்வினையைப் புறங்கண்டார்
காதலித்து மாதே கவலா தொழிகென்ருன். 68

இ-பொ :- வந்த பிதாவைக் கண்டு மனந்தளர்ந்து பாதத்தில் விழுந்த புத்திரியைத் தன் கைகள் பொருந்த வாரியெடுத்தணைத்து மகளே! பூலோகத்திலிருப்பவர்களில் வினையைக் கடந்தவர்கள் யாருமில்லை ஆதலால் கணவனிடத்தில் விருப்பம்வைத்துத் துயரப்படாதேயென்ருன் எ-று.

என்னு முரையு மிகந்து படருழந்து
தன்னுள யர்ந்து தலைவன் றனையடைவான்
வன்னிபுகுவதன்றி வாறே னெனவரற்று
மின்னினுணுகிடையை வேந்தன் விலக்கினுன். 69

இ-பொ :- இவ்வாறு தன் தகப்பன் சொன்ன சொல்லையுந் தவிர்த்துத் தனக்குள் துன்பம் அடைந்து கோபங்கொண்டு கணவன் இடத்திற் போய்ச்சேர அக்கினி ப்ரவேசமாவதே அல்லாமல் இனி உயிருடன் வாழேனென்று சொல்லி அழகியமின்னலைப்போல நுண்ணிதான இடையையுடையவளாகிய தன் மகளை அக்கினிப் பிரவேசமாகவொட்டாமல் அவ்வரசன் விலக்கினுன் எ-று.

தந்தை விலக்கத் தளிரியலாள் சாவோரிஇச்
சிந்தை நலியுந் துயரஞ் சிறிதகற்றிப்
புந்தி தெளியச் சிவனையே பூசைசெய்வே
னெந்தையறிவா யெனக்கயினி யாயினுள். 70

இ-பொ :- தன் பிதா தடுத்ததினுல் மாந்தளிர்போன்ற சாயலை உடைய சீமந்தனியானவள் சாதலை யொழிந்து மனம் வருந்தும் படியான துயரஞ்சிறிது நீங்கிப் புந்தி தெளிவடைந்ததினுல் இனிப் பரமசிவனையே பூசை செய்வேன் என்னையனே நீ அறிவா யென்று சொல்லி விதந்துவாளுள் எ-று.

எண்ணூர் தொழவா ழிகலிந்திர சேனன்
றண்ணூர் புனல்வீழ்ந்து தன்மதலை மாய்ந்ததுவும்
பேண்ணு ரணங்குகைமை பெற்றதுவுங் கேட்டரற்றிக்
கண்ணு ரவலப் புனலாற் கடல்செய்தான். 71

இ-ள்:- பகைவரெல்லாம் வணங்கும்படி வாழ்கின்ற பலமுள்ள இந்திரசேன மகாராசன் தன்புத்திரன் குளிர்ச்சி பொருந்திய யமுனை யாற்றில் விழுந்து இறந்ததுவும் மருமகள் கைம்பெண்ணுனதுவுங் கேள்விப்பட்டு அழுது கண்களிலிருந்து பெருகாநின்ற துக்க நீரினுல் சமுத்திரமொன்றுண்டாக்கினுன் எ-று.

சுற்றமு நற்ருயுந் துயர்க்கடலின் மூழ்கினுர்
மற்று நிடதத்தா ரெல்லா மனங்கவன்று
கொற்றவனே யெங்கொளித்தா யென்றுட்குழைந்
[தழுதார்
பற்றலருங் கேட்டார் பழம்பகை தீர்ந்தோமென்ருர். 72

இ-பொ :- பந்துசனங்களா யுள்ளவர்களும்நல்ல தாயுந் துக்கசா கரத்தில் முழுகினுர்கள்; இவர்களுமன்றி நிடததேசந்தாரெல்லாரும் மனக்கவலையுற்று எங்கள் அரசனே யெங்கேயொளிந்தாயோவென்று மனங்குழைந்து அழுதார்கள். பகைவர் இந்தச் செய்தியைக்கேள்விப் பட்டுப் பழம்பகை தீர்ந்தோமென்ருர் எ-று.

காலமிஃதென்னக் கலிமாவுங் கைமாவும்
வேலிலகு தானையுடன் மேவார் சமர்வேட்டுக்
கோலியம ராடிநளன் கோமகனைத் தேவியுடன்
ஞாலமெலா நொந்து நடுங்கச் சிறைவைத்தார். 73

இ-ள் :- அப்படிக் கேள்விப்பட்ட பகைவர்கள் இந்திரசேனனை வெல்லுதற்கு இதுதான் காலமென்று கனைக்காநின்ற குதிரைகளுந்

துதிக்கையையுடைய யானைகளும் வேலேந்திய பதாதிகளுடன் வரச் சென்று யுத்தஞ்செய்தலை விரும்பிச்சூழ்ந்துபோர்செய்து நளச்சக்கிர வர்த்தியினுடையபுத்திரனாகிய இந்திரசேனனை அவன் மனைவியுடன் கொண்டு போய்த் தேசமெல்லாம் நொந்து நடுங்கும்படி சிறையில் வைத்தார்கள் எ-று.

மல்கு நிதியும் வளநாடு மாநகருஞ்
செல்வ முழுதுஞ் செருநரே கைக்கொண்டு
பல்பகல்வந் தாளுநாட் பாதலத்தை விட்டெழுந்த
வில்கெழுதோண் மைந்தன் வினையம் விளம்புவாம். 74

இ-பொ :- நிறைந்த நிதிகளையும் வளப்பம் பொருந்திய நாட்டினையுற பெருமை பொருந்திய நகரத்தையும் மற்றுமுள்ள செல்வ மெல்லாவற்றையும் பகைவர்கள் கைக்கொண்டு வந்திருத்து பலநாள் ஆண்டு கொண்டிருக்கும் நாளில் பாதாளத்தை விட்டு வந்த வில் பொருந்திய புஜத்தையுடைய சந்திராங்கதனுடைய செய்தியைச் சொல்லுகிறோம் எ-று.

வேறு

நன்னதிக் கரையின்வந்து நளன்றரு மிந்திரசேன
னின்னருண் மதலைவாமா வியல்புட னேறுமேல்வை
யன்னவன் மனைவியாயத் தவர்களோ டணுகித்தானும்
பொன்னிரு கரையுஞ்சிந்தும் பூம்புன லாடவந்தாள். 75

இ-பொ :- நளச்சக்கிரவர்த்திபெற்ற புத்திரனாகிய இந்திரசேன னுடைய இனிதாகிய அருள் பெற்ற புத்திரனானவன் நல்ல யமுனை ஆற்றங்கரையில் வந்து தாவிச்செல்லுங் குதிரையின்மேல் இயல் புடனேறும்போது அவன் மனைவியாகிய சீமந்தனியானவள் தோழிக் கூட்டங்களுடன் சென்று இரண்டு கரையிலும் பொன் சிந்துகின்ற யமுனை ஆற்றில் நீராட வந்தாள் எ-று.

ஐயிரு காதஞ்சந்தத் தருங்கடி கமழச் செம்பொன்
மெய்யணி திகழநொய்ய வெண்டுகின் மருங்கிற்சாத்தித்
துய்யவ ரிருவர்காணத் துனைப்பரி யேறியாடு
மையறு குமரற்கண்டு மனமறு குற்றுநின்றாள். 76

இ-பொ :- நீராட வந்தவள் பத்துக்காதம் வரையில் கிடைப் பதற்கரிய சந்தன வாசனை பரிமளிக்கவும், சரீரத்திலணிந்திருக்கும் ஆபரணங்கள் பிரகாசிக்கவும், துண்ணியதாகிய வெள்ளை வஸ்திரம் இடையயிலணிந்து பரிசுத்தர்களானநாகராசனும் இராக்கதனுமாகிய இருவரும் பார்க்கும்படி வேகமாகச் செல்லத்தக்க குதிரையிலேறிக் கொண்டு விளையாடுகின்ற குற்றம் நீங்கிய அந்த ராசகுமாரனைக் கண்டு மனங்கலங்கி நின்றாள் எ-று.

மங்கல மிழந்துமெய்யின் மணவணி துறந்துநின்ற
கொங்கலர் கோதைதன்னைக் குமரனுங் குறுகிநோக்கித்
திங்கள்வா ணுதனீயார்கொ றிருமணம் புணர்ந்தாள்யாவ
னிங்குநீ கைமையான காரணமென்கொ லென்றான். 77

இ-பொ :- மங்கிலிய சூத்திரமிழந்து அங்கத்திலணியும் மங்கள யுத்துக்குரிய ஆபரணங்களை யுமிழந்து நின்ற சீமந்தனியைச் சந்திராங்கதன் சென்று கண்டு உன்னைச்சிறப்புடன் விவாகஞ்செய்து கொண்டவன்யாவன்? இப்போது நீ கைம்பெண்ணாயிருக்குங்காரண மென்னவென்றான் எ-று.

வாசனைத்திரவியம் கைம்பெண்ணான காலத்தில் அணிவதில்லை யாயினும் அளகத்துக்குள்ள இயல்பைக் குறித்துச் சொன்னதாகக் கொள்ளுத லொன்று அன்றியும் கொங்கலர் கோதை என்பது அன்மொழித்தொகை யாதலால்பதம் பிரித்துப் பொருளுரைக்க வேண்டுவதின்று.

அவனவை வினவலோடு மரிவையு நாணிநிற்பக்
கவலுறு மவடன்றோழி யொருமகள் கழறுகின்றா
னிவள் பிதாச் சித்திரவன்ம னிருநில முழுதுங் காக்குந்
தவலருங் கேள்விச்சந்திராங் கதனிவ டலைவனுமால், 78

இ-பொ :- இவ்வாறு அவன் வினவினமாத்திரத்தில் சீமந்தனி நாணத்துடன் நிற்பதினால் கவலை யடைந்திருக்கும் அவளுடைய தோழிமார்களிலொருத்தி சொல்லுகின்றாள் ( ராசகுமாரனே கேள் ) இவளுடைய தகப்பன் சித்திரவன்மன் இவள் கணவனேவென்றால் பெருமை பொருந்திய பூமி முழுவதையுங்காக்கும் கெடுதலில்லாத நல்லகேள்வியையுடைய சந்திராங்கதனென்பவன் எ-று.

கொடுவினை துரப்பமற்றக் கோமகன் றானுமுன்னாட்
டொடுபுனல் யமுனையாற்றுட் டுஞ்சிடத் துயரமெய்தி
யுடுபதி யிழந்துமாழ்கு முரோணியி னொளியைநீத்து
வடுவகல் கற்பினங்கை மங்கலமிழந்து நின்றாள். 79

இ-பொ :- ( இவள் கைம்பெண்ணானதற்குக் காரணமென்ன வெனில் இவள் வாழ்ந்துகொண்டிருக்குநாளிலொருநாள் ) கொடிய வினையானது இழுத்துக்கொண்டுபோகப்போய் ஆழ்ந்தபுனலையுடைய யமுனை யாற்றில் இவள் கணவனாகிய அந்தராசகுமாரன் இறந்து போனதினால் துயரமடைந்து சந்திரனை இழந்து விசனப்படுகின்ற ரோகணி நக்ஷத்திரம் போல வொளியிழந்து குற்றமில்லாத கற்பினை யுடைய இந்த மாதானவள் மங்கலமிழந்திருக்கின்றாள் எ-று.

அசுவினி முதலாகச் சொல்லப்பட்ட இருபத்தேழு நக்ஷத்திரங்களும் சந்திரன் மனைவியர்களென்றும் அவர்களுக்குள் உரோகணி இடத்தில் சந்திரனுக்குமிகுந்த பிரியமென்றுஞ்சொல்லப்படுவதினால் சந்திரனையிழந்த உரோகணிபோலென்றார்.

மங்கல மிழந்துசென்ற வருடமூன் ருகுமையா
திங்களங் கண்ணிவேய்ந்த சிவனது சோமவாரங்
கொங்கையங் கண்ணி நோற்பாள் குளிர்புனலாடல் [வேண்டி
யிங்கெழி லாயமெல்லாஞ் சூழ்வரவெய்தினளே. 80

இ-பொ :- ராசனே மங்கிலியமிழந்து மூன்று வருஷமாகின்றது அன்றுமுதல் இவள் சந்திரனாகிய அழகிய மாலையணிந்த பரமசிவனுக்குரிய சோமவாரவிரதம் அனுஷ்டிக்கின்ருள். அதன்பொருட்டு நீரில் ஸ்நானஞ்செய்ய விரும்பி அழகுள்ளதோழிமார் கூட்டஞ்சூழ்ந்துவர இவ்விடத்தில் வந்தாள்.

அன்றியு மிவடன்கேள்வ னரும்பெறற் ருதைதன்னைக்
கன்றிய தெவ்வர்பற்றிக டுஞ்சிறை வைத்துநீதி
யொன்றிய நாட்டையெல்லா மொருங்குடன் [புரவா நின்ருர்
வென்றிவேற் குமரகேண்மோ வென்றவள்விளம்புங்காலை

இ-பொ :- இதுவுமல்லாமல் இவன்கணவனுடைய தகப்பனைப் பகைகொண்டுசத்துருக்கபிடித்துக்கொண்டுபோய்க்கொடியசிறையில் வைத்து நீதி பொருந்திய நாட்டையெல்லாம் ஒழுங்காக அரசுசெய்கின்ருர்கள். வெற்றி பொருந்திய வேலாயுதத்தையுடைய அரசனே கேளென்று அந்தத்தோழி சொன்னபோது எ-று.

நாணொடு நின்றநங்கை நாணிகந் தவிருஞ் செம்பொற்
பூணணி மார்பனேநீ புதுமலர்ப் பகழிசேர்க்குந்
தூணியுஞ் சிலையுமில்லாற் தொடுகழன் மதனேவன்றிச்
சேணுயர் விசும்பிற்றேவ குமரனே செப்புகென்ருள். 82

இ-பொ :- நாணத்துமனின்ற சீமந்தனியானவள் பின்புநாணம் விட்டுப்பிரகாசியாநின்ற செம்பொன்னாலாகிய ஆபரணங்களணிந்த மார்பையுடைய மன்னவனே நீ புதிய மலர்க்கணைகள் வைக்குந் தூணியுங்கருப்பு வில்லுமில்லாத வீரகண்டையணிந்த மன்மதனே அல்லது மிகவுமுயர்ந்த தேவ லோகத்தில்வாசஞ் செய்யும் தேவகுமரனே சொல்லென்ருள் எ-று.

என்றவன் மீட்டுமென்ற னின்னலே முதலவெல்லா
மொன்றறப் புகலக்கேட்டே யெனையுநீ யுணர்தி
[கொல்லோ
கன்றிய மனத்தேனின்னைக் கனவிடைக் கண்டேன்போலு
நின்றநீ யாவநின்னை நிகழ்த்துதி கரவாதென்ருள். 83

இ-பொ :- அவளிவ்வாறு சொல்லிப் பின்னுஞ்சொல்லுகிருள் எனக்கு நேரிட்ட துன்பங்கள் முதலானவைகளையெல்லாம் ஒன்றும் வழுவாமற்கேட்டாய். நீ என்னையறிவையோ வருந்திய மனதை யுடைய நான் உன்னைக் கனவில் கண்டேன் இங்குநின்றநீயாவன்? ஒளிக்காமலிப்பொழுதே சொல்லென்ருள் எ-று.

மற்றவனுரைத்தான் யானேர் மானிடனல்ல னெற்
செற்றமில் குணத்துநங்காய் சித்திபெற்றுடையதேவ
னற்றமிள் புவனமெங்கு மொல்லையி னடைந்துமீளக்
கற்றவ னுவனென்று கார்வளஞ் செங்கைபற்ரு, 84

இ-பொ :- அவளிவ்வாறு வினவசந்திராங்கதன் சொல்லுகிருன் குற்றமில்லாத குணத்தையுடைய மாதே நான் மனிதர்களுக்குள் ஒருவனல்லன். எண்ணில்லாத சித்திகள்பெற்ற தேவரிலொருவன் பழுதில்லாத உலகங்களெங்கும் அதிவிரைவாகச் சென்றுவரக் கற்றவனென்று சொல்லி அவளுடைய செங்காந்தள் மலர்போன்ற கையைப்பிடித்துக்கொண்டு. எ-று.

அருகுற வழைப்பமாத ரையுற வெய்திப்பின்னும்
பருகுவார் போலநோக்கிப் பனைமுலை புனகங்கொள்ள
வெருவினர் நிற்பமன்னன் மின்னிடைச் செவியின்
[மெல்லென்
ஞெருமொழி யுறுதியாக வுவப்புட னுரைப்பதானுன். 85

இ-பொ :- சமீபத்தில் வரும்படி அழைக்க அதைக்கண்ட தோழி மார்கள் சந்தேகமுற்றுப் பின்னும் அவ்வரசனை உண்ணுமவர்களைப் போலப்பார்த்துப் பருத்தனங்கள் புனகத்தையடையவதுமன்றிப் பயந்துநிற்கசந்திராங்கதன் சீமந்தனிகாதில்மெதுவாகஒருவார்த்தை யுறுதியாகச் சந்தோஷத்துடன் சொல்லலானுன்.

உன்னுறு துணைவன்வேருே ருலகத்தி னுள்ளான்மாதே
யன்னவன் றனக்குயானு மாருயிர்த்தோழனந்த
மன்னனு மிரண்டுநாளின் வந்துன தவலநீக்கு
மின்னதுபுகல்வான்வந்தே னென்றனனெழிலின்மிக்கான்.

இ-பொ :- மாதே உன்கணவன் வேரேருலகத்தி லிருக்கிருன் அவனுக்குநான் உயிர்போன்ற சிநேகன் அதந்தமன்னவனு மிரண்டு நாளையில் வந்து உன்னுடைய துக்கத்தைநீக்குவான் இந்தச் சேதியுனக்குச் சொல்ல நான் வந்தேனென்று அழகில் மிகுந்த சந்திராங்கதன் சொன்ஞன். எ-று.

நெஞ்சினி னவலநீத்தி நெற்றியங் கண்ணுனணே
வஞ்சிறுண் ணிடையா யன்னேன் வருவதேதிண்ணமாகுந்
தஞ்சமென் றிதனையார்க்குஞ் சாற்றலையென்றுசாற்றிப்
பஞ்சின்மெல் லடியினுட்கு மீட்டிது பகரலுற்ருன். 87

இ-பொ :- சந்திராங்கதன் பின்னுஞ் சந்தேக நீங்கச்சொல்லு கிருன் பூங்கொடி போன்ற நுண்ணிய இடையையுடையவளே உன் மனதிலிருக்குந் துன்பத்தை நீங்க நெற்றிக் கண்ணையுடைய பரம சிவனுணைப்படி அவன் வருவது நிச்சயமாய் நான் சொன்னவார்த் தையை எளிதாகக் கருதியாருடனுஞ் சொல்லாதேயென்றுசொல்லிச் செம்பஞ்சினுமெல்லிய பாதத்தையுடையசீமந்தனிக்கு மறுபடியுமிந்த வார்த்தை சொல்லுகின்ருன் எ-று.

தெரிவைநின் கொழுநற்குற்ற திறனெலாந்தெரியச் [சொன்னேன்
பரிவுறு மெனதுதாதை தாயர்தம் பயவுநீக்க
விரைவினி னெனதுதேயத் தேகுவனென்று வேகக்
குரகதந் தூண்டிவைவேற் குரிசிலுங் கடிதிற்போஞன்.

இ-பொ ;- மாதே உன் கணவனுக்குப் பொருந்திய செய்கை யெல்லாம் உனக்குத்தெரியும்படிச்சொன்னேன்; இனி என்னிடத்தில் விருப்பம் வைத்திருக்கும் என் தாய் தந்தையருடைய வருத்தத்தை நீக்க விரைவாக என் தேசத்துக்குச் செல்லுகிறேனென்று சொல்லிக் கூர்மை தங்கிய வேலாயுதத்தையுடைய சந்திராங்கதனுனவன் வேக மாகச் செல்லத்தக்க குதிரையை நடத்திக்கொண்டு துரிதமாகப் போஞன் எ-று.

சேயொளிக் குரிசில்போய பின்னரத் திருவினல்லாண்
மாயமோ வன்றிநெஞ்சின் மயக்கமோ கனவுகொல்லோ
போயவ னுரைத்தவெல்லாம் பொய்கொலோமெய் [கொலோவென்
ருயவ ளழுதுதேம்பி யவலங்கொண் டினையசொன்ஞள்,

இ-பொ :- செவ்விதான ஒளியையுடைய சித்திராங்கதன்போய் விட்ட பின்பு திருமகளினுஞ் சிறந்த அழகுள்ள சீமந்தனியானவள் இப்போது போன இந்தத் தேவகுமாரன் சொன்னதெல்லாம்

மாய்கையோ அல்லது நம்முடையமனதிலிருக்கு மயக்கமோ அல்லது சொப்பனமோ பொய்யோ அல்லது மெய்யோவென்று அழுதுதேம்பித் துன்பங்கொண்டு இந்த வார்த்தை சொன்னுள் எ-று.

வேறு

என்னுறு சிந்தனை யென்கண வன்பால்
மன்னுவ தல்லது மற்றெரு வன்மேற்
றுன்னுவ தன்று விளைந்தமை சொல்லி
னன்னவ னேயெனை யாளு நலத்தோன், 90

இ-பொ :- பொருந்திய என்மனமானது என் கணவனிடத்திற் பொருந்து மேயல்லது மற்றெருவனிடத்திற் பொருந்துவதன்று ஆதலாலிப்போது நடந்ததை ஆலோசிக்குமிடத்தில் இங்குவந்து போன மகாபுருஷன் என்னை யாளத்தக்க தன்மையை யுடைய என் கணவனேயாகும் எ-று.

யாக்கிய வர்க்கந்த மில்லுகை நல்லாள்
வாக்கிய நம்பி மழுப்படை வள்ள
லாக்கினை யாலவ னுக்கருள் பூசைப்
பாக்கியம் வந்து பலித்தது கொல்லோ. 91

இ-பொ :- யாக்கிய வாக்கரென்னு முனிவருடைய பத்தினி யாகிய மயித்திரை சொல்லிய வார்த்தையைநம்பி மழுவாயுதமேந்திய பரமசிவனது ஆக்கினையாகிய சைவாகம விதிப்படி அவனுக்குச் செய்த பூசைப்பாக்கியம் நமக்குவந்து பலித்ததுவோ எ-று.

அன்றியு முன்னமோ ரந்தண னெந்தைக்
குன்றிரு வோர்பதி னுயிரசால
மன்றல்செய் தோனுடன் வாழ்குவளென்ற
நன்றறி சொன்னெறி நண்ணியசேயே. 92

இ-பொ :- இதுவுமல்லாமல் முன்னமொரு பிராமணன் உன் குமாரத்தி பதினுயிர வருஷம் கணவனுடன் வாழ்வாளென்று என் பிதாவுடன் சொன்ன நன்மையறிந்த சொல்லின் முறைமை பொருந்தியதோ எ-று.

நிரந்தர நற்சொ னிமித்தமு முண்டா
நரந்தரு பூசை மகிழ்ந்தெமை வாழ்வித்
தரந்தரு பூசை மகிழ்ந்தெமை வாழ்வித்
தரந்தை கெடுப்பதை யாரறிகிற்பார், 93

(தொடரும்)

# வேதத்தின் கண்

திரு. எஸ். வெங்கட்ராமன்.

"ஜாதி வேற்றுமையை எவ்வாறு சமுதாயத்திலிருந்து களைவது?" என்று ஒரு முறை ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஒரு அன்பர் வினவினர். அதற்கு அவர், "இறைவனிடம் பக்தியை வளர்ப்பதன் மூலம்" என்ற தனிச்சிறப்பு மிக்க பதிலை அளித்தார். இதே கருத்தைத்தான் ஒரு சமயம் சுவாமி விவேகானந்தர், ராமேசுவரத்தில் உரையாற்றும் போது, "ஜாதி, இன, மத வேறுபாடின்றி எல்லா மக்களிடமும் சிவனைக் கண்டு வழிபடுக" என்று மக்களிடம் கூறினர்.

சிறந்த சிவனடியார்களாகத் திகழ்ந்த அறுபத்து மூன்று நாயன் மார்களின் வாழ்க்கை, "ஒன்றே குலம்" என்பதற்கான ஒப்பற்ற சான்று. பிறப்பால் ஒவ்வொரு நாயன்மாரும் வெவ்வேறு ஜாதிகளைச் சேர்ந்தவர்கள். ஆனுல் அவர்கள் அனைவருமே சிவ வழிபாட்டால், சிவபெருமானையே பரம்பொருளாக நினைத்து செயற்கரிய செயல் களைச்செய்தமையால், 'தொண்டர்குலம்' என்னும் அடையாளத்தைத் தாங்கி நின்றனர்.

நாயன்மார்கள் அறுபத்துமூவரில், 'ஸ்ரீருத்ரபசுபதி' என்பவரும் ஒருவர். இவர், வேதத்திலுள்ள 'ஸ்ரீருத்ரம்' என்னும் துதியை ஓதி, ஓதியே சிவபெருமானின் திருவடிகளை அடைந்தவர்; திருத்தலையூர் என்னும் தலத்தில் அந்தணர் குலத்தில் அவதரித்தவர். இவர் இறைவனடி கூடிய நாள் ஒரு புரட்டாசி மாதம் அஸ்வினி நக்ஷத்திர மாகும். (இன்று, இந்த அருளாளரின் குருபூஜை தினமாகும்) பசுபதி நாயனரின் வரலாற்றைத் தெரிந்து கொள்வதற்கு முன் ஸ்ரீ ருத்ர மகிமையைப் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

வேதம் இறைவனுல் வெளிப்படுத்தப்பட்டது. அதை நான்காக வியாசர் பிரித்தார். அவை முறையே ருக், யஜுர், சாம, அதர்வணம் ஆகும். இவற்றுள் யஜுர் வேதத்தின் மையப் பகுதியாக உள்ளது ஸ்ரீருத்ரம். யஜுர் வேதத்தின் தலை சிறந்த பகுதியாக இது கருதப் படுகிறது. யஜுர் வேதம் 7 காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் ஸ்ரீருத்ரம் நாலாவது காண்டமாக 11 அநுவாகங்களை உடைய தாக விளங்குகிறது. வேதத்தின் இதய ஸ்தானத்தில் இருப்பது. 'நம: சிவாய' என்னும் திருவைந்தெழுத்தாகும். வேதத்தின் 'கண்' எனச்சொல்லப்படுவது ஸ்ரீருத்ரம். திரு ஐந்தெழுத்து, 'கண்மணி'

ஒரு மரத்தின் வேரில் நீருற்றினுல் எப்படிக் கிளைகள் மற்றும் இலைகள் தழைக்குமோ, அதுபோல ஸ்ரீருத்ர மந்த்ர ஜபத்தின் மூலமாக எல்லா தேவதைகளும் திருப்தி அடைகிருர்கள் என்கிறது ஸுத ஸம்ஹிதை ஆகவேதான் அன்ருட வழிபாட்டிலும் ஜபத்திலும் ஹோமங்களிலும் ஸ்ரீருத்ரம் தொன்றுதொட்டுமிகச்சிறந்தஇடத்தில் உள்ளது.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த ஸ்ரீருத்ரத்தை குளிர்ந்த பொய்கையில் கழுத்தளவு நீரில் நின்றபடி தினசரி ஓதி வந்தார் பசுபதியார். அவரது தவத்தினையும் இடைவிடாது உருத்திரம் ஓதி வரும் பாங்கினையும் கண்டு சிவபெருமான் திருவுளம் மகிழ்ந்து அவருக்கு காட்சியளித்து அருள்புரிந்தார். ஸ்ரீருத்திரத்தை இடை விடாமல் ஜபித்து இறைவன் திருவடிகளை அடைந்ததால் பசுபதி நாயனுருக்கு ருத்திர பசுபதி நாயனுர் என்ற சீரிய பெயர் உலகில் வழங்கப்பெற்றது.

ருத்திர பசுபதி நாயனுர் அவதரித்து முக்தி பெற்ற இடம், திருத் தலையூர் என்னும் திருத்தலம் ஆகும். இது மயிலாடுதுறை–பேரளம் மார்க்கத்தில், கொல்லுமாங்குடிக்குக் கிழக்கே 3 கி. மீ. தூரத்தில் உள்ளது. திருத்தலையூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான், "பாலேசுவரர்" என்றும், அம்பிகை "பார்வதி அம்மன்" என்றும் அழைக்கப்படுகிருர்கள். திருக்கோயிலின் தென்புறம் உள்ள திருக் குளத்தில்தான் பசுபதி நாயனுர் ஓயாமல் ருத்ர ஜபம் செய்து சிவனருள் பெற்ருர். இவருக்கு ஆலயத்தின் தென் பிரகாரத்தில் வடக்கு முகமாக தனி சந்நிதி இருக்கிறது. வருடத்தில் ஒருமுறை புரட்டாசி மாதம் அஸ்வினி நக்ஷத்திரத்தில் இவருக்கு அபிஷேக ஆராதனை நடைபெறுகிறது.

சிவனடியார்கள் அவசியம் இத்திருத்தலத்திற்குசென்று, ஆலயக் குளத்தில் நீராடி, ஸ்ரீருத்ர பாராயணம் செய்து மகிழவேண்டும். இதனுல் இவ்வுலகில் அனைத்து நலன்களையும் பெற்று இறுதியில் சிவானந்தப் பெரு வாழ்வினையும் அடையலாம்.

நன்றி.

— வெள்ளி மணி, தினமணி, 28—10—2007



# திருவாசகத்தில் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், சாத்திரங்கள்

முனைவர். திரு. க. சேகர், எம். ஏ., எம்ஃபில்., பிஎச். டி.,

இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
தருமை ஆதீனக் கலைக்கல்லூரி, தருமபுரம், மயிலாடுதுறை.

உலகத்து வாழும் உயிர்களுள் மானுடப்பிறப்பே தலையாயது. இறைவன் உயிர்களுக்கு மானுடப் பிறப்பை அருளியதன் நோக்கம் பிறவிப்பிணியை அறுத்து, திருவடிஞானம் பெறுவதற்காகும். மனித உயிர்கள் உலகியல் இன்பங்களில் திளைத்து தீவினைகளைச் சேர்த்து இன்னும் இன்னும் பிறப்பென்னும் பேதமையைப் பெறுகின்றன.

இவ்வுலகம் நிலையாமை உடையது மனிதர்கள் பெற்றிருக்கும் உடலும் போகமும் நிலையாமையைப் பெற்றன. இதனை.

" பண்டம் பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்ட அப்பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமு மல்லது
மண்டிய வருடன் வழி நடவாதே " (திருமந்திரம் 144)

எனும் திருமூலர் வாக்கு இதனைத் தெளிவுபடுத்தும்; எனவே, அரிதாகப் பெற்ற இப்பிறவியில் நெறிதானது பேரருள் பெற்று பேரின்பத்தில் திளைப்பது ஒன்றே சிறப்புடையது. அதனைப் பெற்றிட மனிதர்கள் தம்பிறப்பினை வாய்ப்பாக, வரமாகக்கொண்டு வாழ்ந்திடல் வேண்டும் என்பது அருள் நூல்கள் காட்டும் வாழ்வியல் நெறி.

மனிதர்கள் தம் வாழ்வில் அறம் கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும் மறம் கேட்டும் தேவர் வழிபாட்டுக்குரிய மந்திரங்களைக் கேட்டும் அயல் சமய நூல்களைக் கேட்டும் பொன்னுர் மேனியனை எம்பெருமானின் அருளார்ந்த தன்மையைக் கேட்டும் பக்தியுடன் வழிபட்டால் சிவகதிபெறலாம் என்பது திருமூலர் காட்டும்வழியாகும்

" மானுடப் பிறவிதானும் வகுத்தது மனம் வாக்குகாயம்
ஆனிடத்து ஐந்தும் ஆகும் அரன்பணிக்காக அன்றோ "

எனச் சித்தியாரும் இதனை உறுதிபடுத்தும். சிவனின் பேரருளைப் பெறுவதற்கும் சீவன் சிவமாகி சிவானந்த பெருவெள்ளத்தில்

திளைப்பதற்கும் வழிகாட்டுவன ஞானநூல்களாகும். அஞ்ஞான நூல் களுக்கெல்லாம் ஆதியாய், மூலமாய் முதன்மையாய் அமைந்தது வேதமே ஆகும்.

" வேத முதல்வன் முதலாக விளங்கி "
(சம்பந்தர்; திருப்பாம்புரம் 8)

" அருமறை ஆகமம் முதல் நூல் " (சித்தியார் 266)

" வேதநூல் சைவநூல் இரண்டே நூல்கள்" (சித்தியார் 267)

" வேதமொடு ஆகமம் மெய்யாம்; இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள்ளன் " (திருமந்திரம் 2397)

எனும் அருள்வாக்குள் இதனைத் தெளிவுறுத்தும். இத்தகுவேதத்தின் வழி வந்தனவே ஆகமம், புராணம், இதிகாசம், சாத்திரம் தோத்திர நூல்கள் முதலியன, இதனை.

" வேதம்பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்
ஓதும்தமிழ் அதனின் உள்ளுறு நெய் — போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டார்
செய்த தமிழ் நூலின் திறம் "

எனும் பாடல் இதனைத் தெளிவாக்கும். இத்தகு வேதத்தின்சாரமாக, கிளைத்தவையாக, உள்ளீட்டை உணர்த்துவனவாக வழிநடப்பனவாக அமைவன தமிழ் வேதங்களாகப் போற்றப் பெறும் பெருமையுடைய தோத்திர சாத்திரங்கள் ஆகும். தோத்திர நூல்களுள் எட்டாம் திருமுறையில் ஒன்ருக விளங்குவது திருவாசகம். இது தெய்வத் தன்மை பொருந்தியது; கூத்தப் பெருமானின் திருக்கரத்தால் எழுதப் பெற்றது. இது மணிவாசகப் பெருமானல் அருளப்பெற்றது; ஊனினை உருக்கும் அருட்பாடல்களைக் கொண்டது. இத்திருவாசகத்தில் வேதம், ஆகமம், புராணம். இதிகாசம் மற்றும் சாத்திரக் கருத்துக் களின் நுண்மையையும் நெறியையும் முறைமையையும் வெளிப் படுத்தும் முகமாக அமைந்தது இக்கட்டுரை.

## வேதம் விளக்கம்!:

வேதமே அனைத்துக்கும் வித்தாக அமைகிறது. எனவே, இதனை 'எழுதாமறை' என்பர். வேதம், மறை என்பன ஒரு பொருளைத் தருவன. 'வேய் என்பதுமறைவு நிலை எனப்பொருள்படும். மறைந்து

அம்பெய்பவன் வேடன். வீட்டை மூடிக் கூரைப் போடுவதைக் கூரை வேய்தல் என்பர். பானையில் ஒன்றை இட்டு மேலே சுற்றி மறைத்து மூடுவதை வேடு கட்டுதல் என்று கூறுவர். யு. சுப்பிரமணியன் புறத் திணையில் மறைந்திருந்து ஒற்றுஅறிவதை 'வேய்' எனக்குறிக்கிறது தொல்காப்பியம். வேய் என்னும் தமிழ்ச் சொல்லே வேதம் என்பதின் வேர் என்று கூறுவார் மறைமலையடிகள். வேதமானது வித்-வேது-வேதித்தல்-வேதன்-வேதா - வேதியன் - வேதியன்-வேதா ந்தம் என உரு கொண்டிருக்க வேண்டும் என்பர் இரா. சங்கரன்.

வேதம் என்ற சொல்லுக்கு ஞானம், அறிவு என்று பொருள் வேதம் நெடுங்காலமாகக் கேட்டல் வழி வந்தது. ஆதலால், இதனைச் 'சுருதி' என்பர். 'வேதமோர் கீதம்' என்பர் திருஞானசம்பந்தர். வித் என்ற வடமொழிச் சொல்லுக்கு 'அறிவு' என்று பொருள். எனவே, வேதம் என்பது மறைவாகச்சொல்லப்படுவது. மறை எனில்மறைந்து நிற்கும் பரம்பொருளை விளங்க வைப்பது என்பது பொருளாகும் என்பர். கி, லஷ்மணன்.

இந்திய நாட்டில் தோன்றியுள்ள இந்து சமயத்தின் பிரிவுகள் அனைத்திற்கும் மூலநூல் வேதமாகும். வேதம் இறைவனால் ஞானி களுக்கு உணர்த்தப்பட்டது. எனவே, இது பதியினது உபதேசம் என்பர்.

" வேதத்தானென்பர் வேள்வியுளானென்பர்
பூதத்தானென்பர் புண்ணியன் தன்னையே " (அப்பர்)

" வேதமாய் வேள்வியாகி விளங்கு பொருள் " (சம்பந்தர்)

இறைவன் வேத வடிவினனாகவும் வேதத்தை உபதேசித்த வேதிய னாகவும் விளங்குகிறான். வேதங்கள் உலக ஒழுங்கமைவுக்கு வழி காட்டுவது. வேதங்கள் நான்காகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை; ரிக். யசுர், சாம, அதர்வனம் என்பன.

(தொடரும்)

# வாவென்ற வான்கருணைக் கவி

டாக்டர். திரு. அ. கலியபெருமாள்,
எம். ஏ., எம்ஃபில்., பிஎச். டி.,
முன்னைத் துணை முதல்வர்,
அ. வ. அ. கல்லூரி, ( தன்னாட்சி ) மயிலாடுதுறை.

" வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே "

கருப்பஞ்சாறும் தேனும் பாலும் கனிச் சுவையும் கலந்து செவிக்கு விருந்தாகி வள்ளலாரின் ஊனிலும் உயிரிலும் கலந்து தெவிட்டாமல் தித்திப்பது மாணிக்கவாசகரின் திருவாசகம். கருங்கல் நெஞ்சையும் கரைப்பது. அயல்நாட்டு அறிஞரையும் உருக்கத்தால் ஆட்கொண்டது. அத்திருவாசகத்தின் 'திருக்கோத்தும்பி' பகுதியில் அமைந்ததே வாவென்ற வான்கருணைக்கவி. தம்மைக்கடைநிலையில் தாழ்த்திச்சொல்லும் வாதவூரரை உயர்த்திநிற்பது.

" கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றுதாய் கோத்தும்பி "

தில்லையில் அருளிய. இக்கவியில் முதலடி அன்பின்மையை அளக்கிறது. இரண்டாம் அடி மணிவாசகரின் அடக்கத்தையும், பெருமான் ஆட்கொண்டு அருளியதையும் இயம்புகிறது. மூன்றும் அடி எம் பெருமான் கருணை முறைமையை மொழிகிறது. நிறைவான அடி நீறணிந்த பெருமானிடத்து அரசவண்டை ஊதுமாறு நெறிப்படுத்துகிறது.

அன்புக்கு ஓர் அடையாளம் கண்ணப்பன்; அவனின் மறுபெயரே அன்பு. தேவாரத்திருமுறை மூவர்க்கும் முந்தியவர் கண்ணப்பர். அவரின் வரலாற்றை விரிவாகக் கூறும் சேக்கிழார்க்கு முன்பே கண்ணப்பதேவர் திருமறம் முதலிய நூல்களில் கண்ணப்பர்பெருமை கூறப்பட்டுள்ளது. இதனாலேயே ஆரூரர் " கலைமலிந்த சீர் நம்பி கண்ணப்பற்கு அடியேன் " என்று திருத்தொண்டத் தொகையில் ஏத்தி வணங்குகிறார். கலைமலிந்த சீர் என்பது கண்ணப்பரின் கல்வித்

திறத்தைக் குறிப்பதில்லை. கலையான நூல்களில் காணப்படும்புகழே அது. கண்ணப்பநாயனுர் புராணத்தில் சேக்கிழார் கண்ணப்பரை அன்பாகவே காணுகிருர். அவர் வரலாற்றில் இடம் கிடைக்கும் போதெல்லாம் அன்பு என்ற சொல்லைக் கையாளத் தவறுவதில்லை.

கண்ணப்பரைப் போற்றும் ஆரூரர்க்கு முன்பே திருநாவுக்கரசு அடிகள் தமது திருமுறையில் கண்ணப்பரின் அன்பின் திறத்தையும் எம்பெருமான் அருள்திறத்தையும் குறிப்பிட்டுப்பாடுகிருர். நான்காம் திருமுறை, திருக்குறுக்கை வீரட்டப்பதிகம் ஏழாம் பாடல்.

" காப்பதோர் வில்லும் அம்பும் கையதோர் இறைச்சிப்பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க்கலசம் ஆட்டித்
தீப்பெருங்கண்கள் செய்ய குருதிநீர் ஒழுகத்தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனுரே "

காவலுக்குத் கையிலே வில்லும் அம்பும்; அத்துடன் இறைவனை அருத்த இறைச்சி திருமஞ்சன நீர் நிறைந்த கலசமே திருவாய். அத்திருவாய் நீரால் மஞ்சனம் சூட்டப்படுகிறது. அதற்கு முன்பு ஆண்டவன்மேல் இருந்த மலரைச் செருப்பால்தொட்டுமாற்றுகிறது அவன் கண்களில் ஒழுகும் குருதிநீர் மாற்றத் திண்ணன் தனது கண்ணை அப்பிடத் தோண்டுகிருன். அதுபொறுக்காத பெருமான் அவன் கையைப் பற்றிக்கொள்கிருர்.

அப்பர் தரும் காட்சியைக் கருத்திலே கொண்டு கண் அப்பும் சூழலை அமைத்துக்கொள்ளும் சேக்கிழார், ஆரம்பமுதலே 'அன்பை' ஏற்ற பெற்றி கையாள்கிருர். முன்புசெல் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட 101; நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏற 103 அன்பு கொண்டு உய்ப்பச் செல்லும் அவர் 114 வாயின் மஞ்சன நீர் தன்னை விளைத்த அன்பு உமிழ்வன் போல, விமலனுர் முடிமேல் விட்டார் 123; செவ்விய அன்பு தாங்கித் திருக் கையில் சிலையும் தாங்கி 127; ஆர்வமுன் பெருக ஆரா அன்பினில் கண்டு கொண்டே 128; மெய்காட்டும் அன்புடைய வில்லியர் 131; அன்பின் பிழம்பாய்த் திரிவார் 154; எல்லாவற்றுக்கும் சிகரமாக இறைவன் திருவாயால் கண்ணப்பன் அன்பு சிறப்பிக்கப்படுகிறது.

" அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமை அறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம் என்றும்
அவனுடைய நிலைஇவ்வாறு அறிநீ என்றருள்செய்வன் " 157

இத்தகைய கண்ணப்பரின் அன்போடு தமது அன்பை ஒப்பிட்டு மணிவாசகர் கூறி இரங்குகிருர், 'என்னப்பன், என்ஒப்பில்' என்ற

தொடர்களில் இறைவான்பால் உரிமையும், இறைவன் பெருமையும் புலனுகின்றன.

"என்னேயும்" என்பதில் இழிவு சிறப்பும்; ஆட்கொண்டருளி என்பதில் இறைவனின் உயர்வும் வெளிப்படுகின்றன. "வண்ணப் பணித்தல்" குணமாக வகையாக அருளிச்செய்தல் "வா என்ற வான்கருணே" பெருமானின் உயர்ந்த கருணேயை வெளிப்படுத்தும் வண்ணத்தொடர். அன்பில்லாமையால் தயங்கி நிற்கும் - மயங் நிற்கும் அடியானின் தாழ்வைப் பொருட்படுத்தாது தானே முன் வந்து தன்பால் "வா" என்றழைப்பதற்கு எத்துணே உயர்ந்தகருணே உள்ளம்வேண்டும், உயர்ந்த உள்ளம் வெள்ளே உள்ளம்; வெண்ணீ றணிந்தானிடம் இருப்பதில் வியப்பில்லே. இத்தகைய கருணே உள்ளத்தை வேறு இடங்களிலும் போற்றிப் பரவுகிருர் வாதவூரர்.

"கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனே
வல்லாளன்தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லேப் பிசைந்து கனியாக்கித் தன்கருணே
வெள்ளத் தழுத்தி வினேகடிந்த வேதியனே" — அம்மானே

திருச்சரககத்தும் கல்லேக் கனியாக்கும் வித்தையைச் செப்புகிருர்.

"கல்லேமென் கனியாக்கும் விச்சைகொண்டு என்னேநின்
கழற்கு அன்பன் ஆக்கினுய்" 54

தம்பால் மணிவாசகரை அழைக்காமல் அவர்பால் தேடிச்சென்று அருள்செய்யும் தகைமையும் திருவாசகத்தில் புலப்படுகின்றது.

"ஐம்புலன்கள் ஆர, வந்தெனே ஆட்கொண்டுள்ளே புகுந்தவிச்சை
மாலமுதப்பெருங்கடலே ! மலேயே"

அடியார் இருக்கும் இடம் தேடி வந்து பெருமான் அருள்வதை அப்பரும் கட்டுவர்.

"எங்கே என்னே இருந்திடம் தேடிக்கொண்டு
அங்கே வந்து அடையாளம்"

அருளியது பெருங்கருணே அன்ருே தேடிவந்து சிந்தை புகுந்து பெருமான் அருளியதைப் பெரிதும் போற்றுவர் மணிவாசகர்.

"நானேயோ தவம்செய்தேன்! சிவாயநம எனப்பெற்றேன்
தேனுய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்குஅருள் செய்தான்
ஊனுரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே"

இவ்வாறெல்லாம் நம்மைச் சிந்திக்க வைக்கிறது திருவாசகத்தில் இடம்பெறும் வாவென்ற வான் கருணேக்கவி !

# இனியவை நாற்பது

## பூதஞ்சேந்தனர் இயற்றியது

### உரை விளக்கம்

டாக்டர். திரு. கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., பிஎச். டி.,

பேராசிரியர், அ. சை. சி. ஆ. நிறுவனம், தருமபுரம்.

( மலர் 66 இதழ் 11 பக்கம் 521 இன் தொடர்ச்சி )

தானம் கொடுப்பான் தகையாண்மை முன்இனிதே
மானம் படவரின் வாழாமை முன் இனிதே
ஊனம் கொண்டாடார் உறுதி உடையவை
கோள் முறையார் கோடல் இனிது. 27

இ-ள் :- தம்பால்வந்து தம்மைக்காக்கவேண்டும் என வேண்டினார்க்கு அவரைக் காக்கும் வீரம் இனிதாம். தன்னுடைய மானம் கெடவரும் சூழல்வரின் உயிர் வாழாமை மிக இனிதாம். குற்றம் பாராட்டாதவராய் நன்மை உடையனவற்றைக் கொள்ளும் முறைப் படிக் கோடல் மிக இனிதாம்.

தானம் - அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையொடு கொடுத்தல் எனினுமாம்.

ஆற்றுனை ஆற்றென்று அலையாமை முன் இனிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வு இனிதே
ஆக்கம் அழியினும் அல்லவை கூருத
தேர்ச்சியின் தேர்வினியது இல். 28

இ-ள் :- ஒரு தொழிலைச் செய்தற்கு இயலாதவனை, அதனைச் செய்க என வருத்தாமை மிக இனிதாம். இயமனது வரவு என்றும் உறுதியானது என நினைந்து, அதற்கேற்ப நல்லறங்களை விரைந்து செய்தல் மிக இனிதாம். தம் செல்வம் அழியினும் அறன் அல்லாதவற்றைக் கூறுதலோ அன்றிச்செய்தலோ இல்லாமை இனியதினும் இனியது வேறு ஒன்று இல்லையாம்.

" அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தான் என்றுஏவற்பாற் றன்று " (குறள் 515)

எனவரும் குறளும் காண்க.

கயவரைக் கைகழிந்து வாழ்தல் இனிதே
உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே
எளியர் இவர்என்று இகழ்ந்துரையார் ஆகி
ஒளிபட வாழ்தல் இனிது. 29

இ-ள் :- நற்குணம் இல்லாதாரை நீங்கி வாழ்தல் இனிதாம். தக்கவாறு தாம் மேன்மேலும் உயர்தலை நினைந்து, அதற்கேற்ற எழுச்சியுடையராதல் இனிதாம். பொருளால் வறியர் என்று பிறரை இகழ்ந்து உரையாது புகழ்பட வாழ்தல் இனிதாம்.

" மனத்தான் மறுவில ரேனும் தாஞ்சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர் " (நாலடியார் 180)

" இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்ப துடைத்து " (குறள் 150)

என வரும் அறநூல் கூற்றுக்களும் காண்க.

நன்றிப் பயன்தூக்கி வாழ்தல் நனி இனிதே
மன்றக் கொடும்பாடு உரையாத மாண்பினிதே
அன்றறிவார் யார்என்று அடைக்கலம் வௌவாத
நன்றியின் நன்கினியது இல். 30

இ-ள் :- ஒருவர் செய்த உதவியின் பயனைத் தம் வாழ்நாள் முழுவதும் நன்றி உணர்வோடு மறவாது வாழ்வது இனிதாம். நீதி மன்றத்தில் ஒருபால் கோடாத சொற்களைச் சொல்லுதல் மிக இனிதாம். ஒருவர் தம்பால் வைத்த அடைக்கலப்பொருளைப் பிறர் எவரும் அறியார் எனக்கருதி அப்பொருளைத் தாமே கொள்ளாதிருத்தல் மிக இனிதாம். அந்நன்றியினும் பிறிதொரு நன்றி வேறு இன்றாம்.

விளக்கம் :- மன்றம் - நீதி மன்றம்; கொடும்பாடு - சமன் இன்றி ஒரு தலையாகச் சொல்லுதல்.

" நன்றிப் பயன்தூக்கா நாணிலியும் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பாடு உரைப்பானும் — நன்றின்றி
வைத்த அடைக்கலம் கொள்வானும் இம்மூவர்
எச்சம் இகழ்ந்துவாழ் வார் "

எனவரும் திரிகடுகப்பாடலும் 12 காண்க.

அடைந்தார் துயர்கூரா ஆற்றல் இனிதே
கடன் கொண்டுஞ் செய்வன செய்தல் இனிதே
சிறந்தமைந்த கேள்வியர் ஆயினும் ஆராய்ந்து
அறிந்துரைத்தல் ஆற்ற இனிது. 31

இ-ள் :- தம்பால் அடைக்கலம் நேர்ந்தாரின் துன்பம் மேன்மேலும் மிகாது காப்பது இனிதாம். செய்யத்தக்கவற்றைக் கடன் பெறறேனும் செய்தல் இனிதாம். மிகுந்த கேள்விச் செல்வத்தை உடையராயினும் எதனையும் ஒரொருகால் ஆராய்ந்து உரைத்தலே மிக இனிதாம்.

திருவாசகத்தில் வரும் அடைக்கலப்பத்தும் ஈண்டு நினைவு கூரத்தக்கதாம்.

கற்றறிந்தார் கூறும் கருமப்பொருள் இனிதே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன் இனிதே
தெற்றென இன்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்
பத்திமையிற் பாங்கினியது இல். 32

இ-ள் :- நூலறிவு பெற்று நுண்ணிதின் உணர்ந்தோர் தம் செயற்பாடுகளின் பயன் மிக இனிதாம். தம்கீழ் வாழும் குடிமக்களிடத்து அன்பு கூராத அரசின்கீழ் வாழா திருத்தல் மிக இனிதாம். எதனையும் ஆராய்தல் இன்றித் தம்மிடத்து ஒரு செயற்பாட்டைச் செய்ய வைத்தார்க்குத் தீங்கு செய்யாத அன்புடைமையினும்நல்லது ஒன்று இல்லையாம்.

விளக்கம் :- பற்று அமையா - குடிமக்களிடத்து அன்பு செலுத்தாத; தெற்றென இன்றி - தெளிவான முறையில் ஆராய்தலின்றி.

ஊர்முனியா செய்துஒழுகும் ஊக்கம் மிக இனிதே
தானே மடிந்திராத் தாளாண்மை முன் இனிதே
வாய்மடங்கு மண்டமருள் மாருத மாமன்னர்
தானை தடுத்தல் இனிது. 33

இ-ள் :- ஊரில் உள்ளார் எவரும் வெறுக்காத நற்செயல்களைச் செய்துவருகின்ற ஊக்கம் மிகஇனிதாம். ஊரின் தலைவனாக இருக்கும் ஒருவன் தாமத குணத்தால் வரும் சோம்பலின்கண் வீழ்ந்துவிடாது தன் முயற்சி கொண்டு ஆளும் தன்மை மிக இனிதாம். வாட்படை கொண்டு பொரும்போரில் பெருமை உடைய அரசர்கள் தமதுசேனை பொருதலை பெருமை உடைய மன்னர்கள் தடுத்தல் மிக இனிதாம்.

விளக்கம் :- முனியாத - வெறுக்காத; மடி - சோம்பல் தாளாண்மை - முயற்சியால் ஆளும் தன்மை. (தொடரும்)

# சீனு படும் பாடு!

எதற்கெடுத்தாலும் சீனுவைப் பாருங்கள், சீனுவின் வளர்ச்சி யைப் பாருங்கள் என்று சொல்லிக் கொண்டிருக்கும் நமது உலக மயமாக்கலின் தன்னுர்வத் தூதர்கள் நம்மிடமிருந்து மறைக்கும் விஷயம் என்ன தெரியுமா? சீனுவின் அபரிமிதமான தொழில் வளர்ச்சியால் அங்கே ஏற்பட்டிருக்கும் சுற்றுப்புறச்சூழல் பிரச்சனை களும் அதன் விளைவாகப் பெருகிவரும் நோய்களும், வெளிஉலகிற்கு தெரியாமல் மறைக்கப்படுகின்றன.

உலக சரித்திரத்தில் இப்படியொரு அசுரவேகப் பொருளாதார வளர்ச்சியை, சீனு அளவுக்கு வேறு எந்த நாடும் கண்டதில்லை என்பது என்னவோ உண்மைதான். ஆனுல் இந்த வளர்ச்சிக்காக அந்த நாடு கொடுத்துக் கொண்டிருக்கும் விலை, அதைவிட அதிக மானது என்பது மட்டுமல்ல, கொடுமையானதும்கூட மாசுக் கட்டுப் பாடு என்பது முற்றிலும் தகர்ந்து, சுற்றுப்புறச்சூழல் அபாயத்தில் இருந்து சீனுவை எப்படி மீட்பது என்று தெரியாமல் அந்தநாட்டின் கம்யூனிஸ்ட் அரசு விழித்துக்கொண்டிருக்கிறது என்பதுதான் உண்மையானநிலைமை.

தொழில் வளர்ச்சியின் அசுர வேகத்தில். சீனுவின் அனைத்து நகரங்களும் புகைமண்டலங்களாகக் காட்சி அளிக்கின்றன. மேற்கு நாடுகளின் தரத்துடன் ஒப்பிடும்போது. சீனுவின் 6 கோடி நகர்ப்புற மக்கள் தொகையில் வெறும் ஒரு சதவிகிதம் மக்கள்தான் நல்ல காற்றைச்சுவாசிக்கிருர்கள். தொழில் நகரங்களில் சூரியனை முழுமை யாகப் பார்க்க முடியாத அளவுக்குப் புகை பரவிக் கிடக்கிறது என் கிருர்கள். நச்சுக் காற்றில் பாதிக்கப்பட்ட குழந்தைகளின் எண்ணிக்கை நாளும் அதிகரித்து வருகிறது.

தொழில் நகரங்களிலிருந்து வெளிப்படும் நச்சுப்புகை சீனுவின் மற்ற பகுதிகளை எல்லாம் பாதிக்கிறது என்கிருர்கள். மக்கள் நல்வாழ் வுத் துறை என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கும் அளவுக்கு இந்தப் புகையின் விளைவுகள் மக்களின் உடல்நிலையைப் பாதிக்கிறது என்று தெரிவிக்கிறது ஓர் அரசுக்குறிப்பு. ஆயிரக்கணக்கான மரணங் களுக்கு இந்தச் சுற்றுப்புறச்சூழல் பிரச்சனை காரணமாக இருக்கிறது. அதுமட்டுமல்ல, பெரும்பாலான சீனமக்களின் மரணத்துக்கு சமீப காலமாகப் புற்றுநோய் காரணமாக இருப்பதாகவும், அதற்குத் தொழிற்சாலைகளிலிருந்து வெளிவரும் நச்சுப்புகைதான் காரணம் என்றும் சீன அதிகார வர்க்கத்தை அரசுக் குறிப்பு எச்சரிக்கிறது.

சீனாவின் அசுரவேகப் பொருளாதார முன்னேற்றம் அந்த நாட்டையே மூச்சுமூட்ட வைக்கிறது என்று நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை கேலி செய்திருக்கிறது. வருமானம் அதிகரித்திருக்கிறது வாழ்க்கைத் தரம் உயர்ந்திருந்திருக்கிறது என்று சீன மக்கள் ஒரு புறம் மகிழ்ச்சி அடைந்த நிலைமாறி இப்போது பெருகிவரும் மருத்துவச் செலவுகளைப் பார்த்து அங்கலாய்க்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. நல்ல தண்ணீர் கிடைப்பதில்லை என்பது மட்டுமல்ல தொழிற்சாலைகளுக்கு அதிக அளவில் தண்ணீர் தேவைப்படுவதால் தண்ணீர் தட்டுப்பாடும் பெருகி வருகிறது.

மக்கள் அதிக வசதிகளையும் வருமானத்தையும் பார்த்து விட்டனர். இந்தப் பொருளாதார வளர்ச்சியை ஸ்தம்பிக்கவைப்பதோ அல்லது பொருளாதார வளர்ச்சியில் தொய்வு ஏற்படுவதோ, மக்கள் மத்தியில் பெரிய அளவு அதிருப்தியை ஏற்படுத்துவதுடன், ஆட்சியாளர்களுக்கு எதிரான மனோபாவத்தை ஏற்படுத்திவிடக்கூடும். நிலைமை இப்படியே தொடருமானால், தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டு விவசாய நிலங்கள் தரிசு நிலங்களாவதும், பெரிய அளவில் தொற்று நோய்கள் பரவுவதும் தவிர்க்க முடியாததாகிவிடும். மேலைநாடுகளைப் போலல்லாமல் மக்கள் தொகை அதிகமாக இருக்கும் சீனாவில், மருத்துவ வசதிகளை அவ்வளவு எளிதாக மக்களுக்கு அளித்துவிட முடியாது.

பொருளாதார வளர்ச்சி என்பது, அந்தந்த நாட்டுக்கு ஏற்ற படிதான் அமைய வேண்டுமே தவிர, கண்மூடித்தனமான அசுரவேக வளர்ச்சி ஆபத்தாக முடியும் என்பதற்கு சீனா ஓர் உதாரணம். எடுத்ததற்கெல்லாம் அயல் நாடுகளை அடையாளம் காட்டும் நமது ஆட்சியாளர்கள், சீனாவைப் பார்த்து இந்த விஷயத்தில் பாடம் படித்தால் நல்லது.

விரலுக்கேற்ற வீக்கம் தான் விவேகம் என்பதை மத்திய அரசு உணர வேண்டும்.

"இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

உலக இயற்கை இரு வகைப்பட்டது. செல்வம் உடையவராக இருப்பது வேறு. அறிவு உடையவர்களாக இருப்பதென்பதும் வேறு.

(திருக்குறள் 374)

நன்றி! — தினமணி 1—9—2007

# கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் —
# — விழா நினைவலைகள்

❋ ❋ ❋

தருமை ஆதீனப் புலவர்,

**வித்துவான், திரு. தா. குருசாமி தேசிகர்**

மதுரை.

" திருவாமூர் " கொண்ட தருமைக்குருமணிகள், தம் ஆட்சிக் காலத்தில் மாட்சிமை மிக்க. தருமை ஆதீனக் குருமுதல்வர்க்கும், அக்குருமுதல்வரின் குருநாதர் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர்க்கும், தம் பொறுப்பில் உள்ள. திருச்சிராப்பள்ளி மௌனமடக் குருமுதல் வர்க்கும், திருவுருவங்கள் எழுந்தருளுவித்து மூவர்க்கும் உரிய குருபூஜை. நினைவுநாள்களில் சிறப்பாகவிழா நிகழ்த்திவருகிறார்கள். திருவாரூரில் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் விழா இவ்வாண்டு 31—10—2007 இல் சிறப்பாக நிகழ்ந்தது.

## விழா நினைவு :

விழா நாயகராகிய கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் பல்கலைச்செல்வர்; முத்தமிழ் வித்தகர்; கவிஞர்; என்பதனை திருமழுவாடிப் புராணம் உணர்த்துகிறது. இப்புராணம் கீலக ஆண்டு 1929 ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. நூலியற்றிய காலம் சகாப்தம் 1487 என்று குறிக்கப்படுவதால் ஐநூற்று ஐம்பத்தெட்டு ஆண்டு என கணக்கிட லாம். இப்புராணத்தை வெளியிட்ட காலத்தில் " கமலையார் பற்றிய சரித ஆராய்ச்சிக்குப் போதுமான ஆதாரங்கிட்டவில்லை " என்றும். தருமை ஆதீனக் குருமுதல்வரின் குருநாதர் என்றுகூட தெரிய வராது. "இவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை" என்றும்; பதிப்பா சிரியர் குறிப்பிட்டிருப்பது ஆச்சரியமாகவுள்ளது.

அவ்வாச்சரியம் போக்கும் வகையில்பண்டே குருஞானசம்பந்தர் திருவாக்குகள் இருந்தாலும், தற்காலம் " ஆய்வறிஞர்கள் " மூலம், கமலையார் பற்றியசெய்திகள் நிறையக்கிட்டியுள்ளன. அவ்வாராய்ச்சி யால் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர், தஞ்சை மன்னரின் அன்பைப் பெற்றவர் என்பதும், அவர்கள் வழி நின்று திருவாரூரில் ஞானப் பண்ணைத் தலைமைபூண்டு - 'அருளாலயம்' பல புரந்தவர் என்பதும் சந்தாஞசாரியார் பரம்பரையில் வந்தவர் என்பதும் தெரியவரும்.

## குடவாயிலார் ஆய்வு :

† கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர், ஆசாரிய பரம்பரையில் தோன்றியவர். திருவாரூர் செட்டித்தெருவில் வசித்த ஞானப்பிரகாசரிடம் உபதேசம்பெற்றவர். இவரது இயற்பெயர் சிதம்பரநாத மாசிலாமணி ஞானப்பிரகாச பண்டாரம் என்பது. [தருமைஆதீனம் ஞானபுரேசுரர் கோயில் வாயிற்படிக்கட்டில் கல்வெட்டு இன்றும் இப்பெயர் அழிந்து இருந்தாலும், ஓரளவு பார்க்கமுடிகிறது] சீலம் மிக்க செவ்வப்ப நாயக்கரின் கல்வெட்டுகளில் (சிக்கல் வடகுடி) கமலையாரின் திருப்பணிச்செயல் காண்டற்குரியதாய் உள்ளது என்று குடவாயிலார் ஆய்ந்துள்ளார்.

## திருவாரூர்க்கோபுரம் :

திருவாரூர்த் திருக்கோயிலின் வடக்குக் கோபுரம் செவ்வப்பர் காலத்தது. இக்கோபுர நுழைவுவாயிலின் கீழ்ப்புறம் ஒரு மாடத்தில் செவ்வப்பர் உருவமும், மற்றொரு மாடத்தில் ஒரு சிவனடியாராக, கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் உருவமும் காணப்படுகிறது. செவ்வப்ப நாயக்கர் காலத்தில் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாச பண்டாரமும், சகசி மன்னன்காலத்தில் அருணாசல பண்டாரமும், இரகுநாதர் காலத்தில் பிறிதோர் பண்டாரமும் திருவாரூர்த் திருக்கோயிலை நிர்வகித்தனர் என்று முனைவர் குடவாயில் பாலசுப்பிரமணியம் நினைவு கூர்வது குருபூஜை விழாவின் சிறப்பு நிகழ்வாகும். அவ்வாய்வாளர் நம் குருவருள் பெற்றவர்.

## மன்னர் விரும்பியதேன்?

மனிதனிடம் இரண்டு தன்மைகள் உள்ளன. ஒன்று கடவுள் தன்மை. மற்றொன்று விலங்குத்தன்மை. விலங்குத் தன்மை போக்க ‘மெய்யுணர்வாகிய, தத்துவஞானம் முகிழ்க்க வேண்டும். தத்துவம் ஐயப்பாட்டைப் போக்கும்; விஞ்ஞானம் பொருளாய்வு செய்து முடிவு செய்து விடும். ஆனால் தத்துவவழிமுகிழ்க்கும், சத்தியத்தின் நம்பிக்கையை அதனால் ஊட்டமுடியாது. ஆகவே தான் சத்திய வழியாகிய, மெய்மையாம் உழவைச் செய்யும் ஞானிகளை, அரசு போற்றியது. அவர்களின் திருமடங்களை அரசே கட்டிக்கொடுத்தது. இக்கோட்பாட்டை வாதவூரர் “ மண்ணாளும் மன்னர்க்கு மாண்பாகி நின்றானை” என்றும், வாகீசர். ‘வென்றிலேன் புலன்களைந்தும் வென்றவர் வளாகத் தன்னுள் சென்றிலேன்’ என்றும் முன்பே மொழிந்தனவற்றைக் கடைப்பிடித்துத் தஞ்சை மன்னர் செவ்வப்ப நாயக்கர் ஞானப்பிரகாசரை ஆதரித்தார்.

---

† சோழமண்டலத்து வரலாற்று நாயகர்கள் பக்கம் 240

### அருந்தமிழ்ப்பணி :

'கற்றபின் 'நிற்க' அதற்குத்தக' - என்ற வேதவாக்கை கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் நடைமுறைப்படுத்தி ஒழுகினர். 'நிற்க' என்ற ஆணைப்படி நின்றவரை 'குருவே போற்றும்' குருராயரானீர்' என்று, அருணந்திதேவர் வாழ்வுக்கூறுபோல், வாக்குகள். நமக்கு வாழ்வில் விழிப்பு நல்குவனவாக உள்ளன. கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசரின் 'திருமழுவாடிப் புராணத்தில் சிவமே பிரகாசிக்கின்றது. அரிய அவரது திருவாக்கில் தமிழ்மணம் சிவமணமாகி வீசுகிறது. திருநாவுக்கரசர் துதியில், ஓர் அரிய அநுபவ உண்மையைக் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் அருளுகிருர். சிவனருளில் தலைப்பட்டவர்க்குத் தீமைகளும் நல்லனவாகும். என்பதாம். இதனை மனிதர் உணர்ந்து உய்யும் படியாக, நாவரசர் கற்றுணைக் கட்டிக் கடலில் போட்ட போதும், தூண் 'புனையாகி'க்-'காத்தது' என்ற, கருத்தைக்கமலையார் அருளிச்செய்யும் பாடல் நல்ல உபதேசம் ஆகும்.

" சிவனருள் பயின்றபேர்க்குத் தீயவும் நல்லவாதல்
புவனியோர் காணக்கற்றூண் புனையெனத்தன்மைசெய்யப்
பவநெடுங்கடலை நீந்திப் பமிறல்போல் கடல்கடந்த
அவமிலாச் செய்ய நாவுக்கரசர் தாளகத்துள் வைப்பாம் "

### சுந்தரர் உபதேசம் :

கமலையார், 'சுந்தரரை' யானையாக உருவகம் செய்தார். முதலில் பரவையார் பால் புகுந்து, தங்கி, சங்கிலியாரின் 'தளை'யில் இருந்து விடுபட்டு, தன் துதிக்கையால் இந்திரனை ஏவல் கொண்டு, கயிலை சென்ற பெருமிதமிக்க 'முத்தமிழ் வேழமாம்', சுந்தரரைத் துதித்து வணங்குவோமாக என்று அருளிச்செய்துள்ள பாடல் உபதேசமாக விளங்குகிறது. அதே போல திருவாதவூரடிகளை வணங்கித்துதிக்கும் துதியில். குருந்தடியில் அரனடி அடைந்து,

* " நெருங்கு ஞாதுரு மெய்ஞ்ஞான தேயமுப்பலமும் பெற்ற
இருங்கலை வாதவூரரிருபதம் தொழுதல் செய்வாம் "

என்று சிந்திப்பார்.

### இன்பச்சுவையில் :

திருமழபாடியில் 'மாசிமக'விழா நிகழ்வு வீதியில் நிகழும். அவ்வீதியில் உள்ள மாடங்களின் சுதைகளில் கும்பமும் மாலையும் காணப்படுபவை. முத்தணிந்தமங்கையரின் கச்சணிந்த 'முலை'போல்

---

* திருமழுவாடிப்புராணம் - நாட்டுவளம் 14, 15

வளமை காட்டும் என்றும், மாசித்திங்களில் அரன்வீதியில், எழுந் தருளும்போது மங்கையர்கள், மையல்கொண்டு, மாலை வேண்டும் படியாக மன்மதன் வினை இயற்றும் 'வில்'போல, வீதிகளில் கரும்பு கள் பூத்து வளைந்து காணப்பட்டன என்று கூறும் பாடல்கள் காவியச்சுவை ஊட்டுவன. $

அவையடக்கம் :

கமலையாரின் அவையடக்கச் செய்யுள் 'அவையை அடக்கும் முறையில் அமைந்துள்ளது. அருந்தமிழ் நயம் இன்பமளிக்கிறது சொற்பின்வருநிலையில் உள்ள 'அப்பாடல்' படித்து இன்புறற்குரியது

"சின்னூல் பெருநூல் என்னும் நூல்கள்
தெரியாது எனினும், தெரிந்தாற்போல்
புன்னூல் அறிவான் முன்னூலைப் புகன்றேன்;
மழுவைப் புராணம்என
மின்னூன் மருங்கினுமை பாகர் மேன்மைப்
புகழே விளம்புதலால்
இன்னூல் தன்னை முதனூல்கள் எல்லாம்
வல்லோர் இகழாரே!"

நைமிசவனம் :

நைமிசவனம் - தவசிகள் வாழும் இடம் என்று கூறவந்த கமலையார், அத்தவசிகள் வேதாகமங்களைக் கற்று 'அதன்வழி' நிற்பவர் என்றும், கருணையே பூத்த 'மாசிலா மனத்தவர்' என்றும், அடையாளம் காட்டும் பாடல் அறிதற்குரியது.

"உற்ற சைவாகமங்கள் ஓதுநூல் வேதமுற்றுங்
கற்றதன் நிலையில் நிற்கும் கருணையே வடிவதாகிச்
சற்று மாசிலாத சிந்தைத் தபோதனரினிது வாழப்
பெற்ற நைமிசவனம்"

தவஞானிகளியல்பு :

நைமிசவனத்தின் தவசிகள் 'சோதிகழலறிந்த ஆசானாக' இருந்ததை ஒருபாடல் விளக்குகிறது.

"எண்ணிய வுலகனைத்தும் எழுவகைப் பிறப்பினுள்ளும்
பண்ணிய வினையனைத்தும் பராபரத் துண்மை தானுந்

---

$ திருமழுவாடிப்புராணம் - நாட்டுவளம் 14, 15

திண்ணிய மனவிருட்குத் தீபமாகிய மெய்ஞ்ஞானக்
கண்ணினால் அங்கை நெல்லிக்கனியெனக் கண்டிருப்பார் "

நிலை, நிலையாய் பொருளுணர்ந்து ஞானவாழ்வு பெற்றவர் இயல்பை மற்றொரு பாடல் விளக்குகிறது.

" ஆக்கமுங் கேடும் என்றும் அன்னியம் என்று காண்பார்
நீக்கமின் மெய்ஞ்ஞானத்தின் நிலைமையைப்பொருளைக் [கொள்வார்"
தாக்கிய கரணபேதஞ் சஞ்சலம் அவைகள் தீர்ந்தே
வாக்கொடு மனமும் எட்டா வாழ்வு பெற்றினிதிருப்பார் "

முடிவாக 'முனிவரர்' பண்பில் 'கூடா ஒழுக்கம்' முகிழ்த்திடக்கூடா என்பதை இலைமறை காய்மறையாக உணர்த்தும் பாடல் பண்பாடு ஊட்டுவது.

" மனத்திடைச் சிவனையன்றி மற்றொன்றை நினையார் ஆவின்
தனத்தினையன்றி மாதர் தனந்தொடலறியார்; பாசம்
சினத்தலையன்றி யார்க்குஞ் சினஞ்செயக் கருதார்தக்கோர்
இனத்தினை யன்றிச் சுற்றம் இனமென வியந்திடாதார் "

தனம், சினம், இனம் மூன்றையும் நயம்பட உரைக்கும் இத்தமிழே 'சிவபோகசாரமாக' விளைந்தது எனலாம்.

## கரைகண்டவர் இல்லை :

மழபாடி மாணிக்கவண்ணரை-அவர் மகிமையைக் 'கரைகண்டவர்' இல்லை என்பதை அறிவுறுத்தவந்த கமலையார் 'ஈரங்'கொண்டு கடல் ஏழையும் நீந்தலாம்; ஆகாயத்தையும் அளந்துவிடலாம். ஆனால் மழுவையம்பதியாரின் மகிமையை அளக்கமுடியாது - எனக் கடவுள் உண்மை காட்டும் பாடல் தொல்லாணை நல்லாசிரியர் வழிவந்த கேண்மைப் பயனும். அப்பாடல்.

" திகழ்திரைக் கடல் ஏழையும் நீந்தலாம் எனினும்
அகலிடத்துடன் வானையும் அளக்கலாம் எனினும்
தகைமை பெற்றிடு தாணுவாழ் மழுவையம்பதியின்
மகிமையைக் கரைகண்டு எவர் உரைத்திட வல்லார் ? "

## ஞானஉலா :

காவியநாயகராம் 'கமலைஞானப்'பிரகாசரைக் 'குருஞானசம்பந்தர்' ஆவிநாயகராகக் கொண்டார். அங்கயற்கண்ணி மாதேவிநாயகனைச் சிரமேற்கொண்டகுருஞானசம்பந்தர் கமலை ஸ்ரீஞானப்பிரகாசரையே அரனாகக் கண்டார். துரியம் பெருக்கிட ஆரூரில் இன்று ஞானப் பிரகாசனாக இருக்கின்றார் என்று, நமக்கு ஆசானை அடையாளங்காட் டினார். அடையாளங்காட்டினால் மட்டும் போதாது என்று சதாபிடே கமும் கனகாபிடேகமும் கொண்டு குருவருள்புரக்கும் தருமைக் குருமூர்த்திகள் கமலையார்க்குத் திருவுருக்கண்டு, கமலையம்பதியின் 'திருவடிப்போது' நாளும் வீதியில் உலாவரச்செய்து விழா எடுத்து 'சிறப்பு' அழியாத நற்செயலாகும். ஆரூர் மக்கள் தம்தம் இல்லங் களில் ஆசான் இருந்தும் ஆசானை இன்னும் அடையாளங் கண்டு தேடி வணங்கவேண்டும் என்று, இன்று நமையாண்டு அருள்புரியும் குருமணிகள் காலை மாலை நிகழ்த்திய விழாச் சிறப்பு நம்மைத் தீவினையில் விழாதவாறு காப்புச் செய்த கவசமாகும்.

## நிறைவுரை :

கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசரின் பெருமை திருப்பணியாலும் தீந்தமிழ்ப் பணியாலும் அரசுப்பணியாலும் தெரியவரும் எனினும் அவரது குருபணியே - குருஞானசம்பந்தர் மூலமாக 'எத்திசையும் புகழ்மணக்க' விளங்குகிறது. குருஞானசம்பந்தரின் அருள்வாக்கும், திருவாரூர் கொண்ட நங்குருமணிகளின் திருவருட்செய்திகளும் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசரின் கருத்தறிந்த முடிவுகளாகும்' ஆளாகார், ஆளானாரை அடைந்து உய்யார்; மீளா ஆட்செய்து மெய்மையுள் நிற்கிலார் என்ற திருவாக்கு, திருவாரூரால் செயல்பட்ட 'ஞான உலா' கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் குருபூஜைவிழா சிவிகை உலாவாகி மனிதர்கள் ',வாளா மாய்ந்து மண்ணுக்கு இரையாகிக் கழியாமல் உணர்வும் உய்வும் தந்ததாகியது. சிவகாசி, மதுரை, ஈரோடு அன்பர்கள் குழுவே, இவ்வாண்டு மிகுதி. எண்ணற்றவர் குருவருள் பெற்ற திருவாரூர் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் திருவடியை வணங்கி வளம்பெறுவோமாக.

" அரிஅயற்கு முன்னாள் அடிமுடியும் காணாப்
பெரியவனே வந்து பிறந்து — துரியம்
பெருக்கின்றான் ஞானப்பிரகாசனாகி
இருக்கின்றான் ஆரூரில் இன்று "

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஜன்ம நட்சத்திரமான ஆயில்யத் திருநாளில் பாடல் பெற்ற தலங்கள் தோறும் மீண்டும் சிறப்பு வழிபாடுகள் நிகழ்ந்துவருகின்றன. சர்வஜித்து ஆண்டு ஐப்பசித்திங்கள் 17 ஆம் நாள் (3—11—07) சனிக்கிழமை அன்று திருநள்ளாறு என்ற திருத்தலத்தில் உள்ள ஸ்ரீ தர்ப்பாரண்யேசுரர் திருக்கோயிலில் ஆயில்ய வழிபாடு மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. சுவாமிக்கும் அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருநாம நட்சத்திரத்திற்குச் சங்கல்பம் செய்து அர்ச்சனை செய்யப் பெற்றது. அன்பர்கள் பலர் வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

தருமை ஆதீனத் திருமடத்தில் ஆங்கில மாதம் முதல் ஞாயிறு தோறும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வழங்கியருளும் அருள் உரை 4—11—07 ஞாயிறன்று திருமுறைப் பாராயணத்துடன் தொடங்கி நிகழ்ந்தது.

தருமை ஆதீனப்புலவர், பேராசிரியர். முனைவர். திரு, மு. சிவச் சந்திரன் ஐந்திணை ஐம்பது என்ற நூலை அறிமுகம் செய்து சில பாடல்களை விளக்கினார். மாறன் பொறையனார் இயற்றியது; மக்கள் பண்புகளை ஆராய்ந்தறிய அவாவிக்கொண்டிருக்கும் படியான உயர்ந்தோராகிய உலக மக்கள் அகப்பொருள்களின் நுட்பங்களை நன்குணரும்படியாக அகப்பொருட்துறைகள் பலவற்றைச்சேர்த்து குறிஞ்சி முல்லை, மருதம், நெய்தல். பாலை என்ற ஐந்தொழுக்கங்களினையும் தமமுள்கொண்ட ஐம்பது செய்யுட்கள் படித்தறியாத மக்கள் தமிழ் மொழியின் பயனை அடையப்பெருதவர்களாவர்கள்; காப்புச்செய்யுள் அமையவில்லை. பாயிரத்தால் நூதலும் பொருளும் அமைந்துள்ளது; படிப்பவர் உடல், உயிர், நலம் பெறவே, முரசின் இன்னோசைபோல இடித்து முழுங்கும் கார்காலம்; தலைவியைப் பிரிந்தபோது தலைவன் கூறிய கூற்றுபோல நடு இரவில் கொடிய துன்பம் தரும் வழியில் நீ வருவதைக்கேட்டால் தலைவி வருந்துவாள் எனத்தோழி தலைவனிடம் கூறினாள்.

சுனையின் நீர் பெண்மான் குடிக்கப் போதாது என்று பொய்யாக உறிஞ்சும் ஆண்மானின் செயலைக்கண்டு தலைவன் திரும்புவான்எனத் தோழி தலைவியை ஆற்றுவித்தது எனக் கூறினர். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் இடையேசில அரிய செய்திகளை விளக்கியருளினார்கள்.

ஆதீன அடியார்களும் மதுரை, கும்பகோணம், சீகாழி, நெய்வேலி அன்பர்களும், த. ஆ. க. கல்லூரிப்பேராசிரியர்களும் மாணவர்களும் கேட்டுப் பயன் எய்தினர்.

அடுத்த அருளுபதேசம் 2—12—07 ஞாயிறன்று நிகழும். அன்பர்கள் கேட்டுப் பயன் அடைவார்களாக.

## தருமையில்
## அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காதேவிக்கு
## 57 ஆவது சதசண்டிவேள்வி

தருமை ஆதீனம் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்கா தேவிக்கு இவ்வாண்டும் 12—10—07 வெள்ளிக்கிழமை முதல் 21—10—07 ஞாயிற்றுக்கிழமை வரை 10 நாட்களும் நவராத்திரி விழாவை முன்னிட்டு உலக நலன் கருதி சதசண்டி வேள்வி விழா ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருஉளப்பாங்கின் வண்ணம் மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. ஸ்ரீ துர்க்காதேவி சந்நிதியில் மலர் மாலைகளாலும் மின்விளக்குகளாலும் அலங்கரிக்கப்பெற்றிருந்த மகாவேள்வி மண்டபத்தில் யாக கலசங்கள் வைத்து அலங்கார ஆராதனைகள் செய்வித்துச் சிறப்பான முறையில் சதசண்டி வேள்வி நிகழ்த்தப்பெற்றது. நாள்தோறும் சுவாசினி, குமாரி, வடுபூஜை, சதுர்வேத பாராயணம், தேவி மாகாத்மியம் பாராயணம், திருமுறைகள் அபிராமி அந்தாதிபாராயணம் ஸ்ரீதுர்க்காதேவிக்கு லட்சார்ச்சனை ஸ்ரீ வித்யாசக்கரமாகிய மேருவிற்கு சகஸ்ரநாமார்ச்சனை மற்றும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன.

20—10—07 சனியன்று பகல் சப்தசதி ஹோமமும் மஹாபூர்ணாகுதியும்நிகழவேள்வி இனிது நிறைவுற்றது. 21—10—07 ஞாயிறன்று காலை ஸ்ரீ துர்க்காதேவிக்கு மஹா அபிஷேகமும் விசேஷ அலங்கார ஆராதனைகளும் நிகழ்த்தப்பெற்றன. 12—10—07 வெள்ளி முதல் 21—10—07 ஞாயிறு முடிய நாள்தோறும் இரவு வழிபாட்டின்போது புராணம் என்ற அங்கமாக வேளூர் தேவஸ்தானம் திரு. வி. மாத்ருபூதேசுவர சாஸ்திரி தேவி மாஹாத்மியம் பற்றி விரிவுரையாற்றினர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் இரண்டு வேளைகளிலும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்கட்குத் திருவருள் பிரசாதம் வழங்கி அருளினர்கள்.

## ஆதீனக் கல்வி நிலேயங்களின் கலேமகள் விழா

தருமை ஆதீனக் கல்வி நிலேயங்களில் வேத சிவாகமப்பாடசாலே தேவாரப் பாடசாலே ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி, மேல் நிலேப்பள்ளி, தருமபுரம் ஆதீனம் கலேக்கல்லூரி இவற்றின் சார்பில் நவராத்திரி நாட்களில் கலேமகள் விழா இனிது நிகழ்ந்தது.

நாள்தோறும் மாலே 3 மணியளவில் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் கலேமகள்விழா நிகழ்ச்சிகள்நிகழ்ந்தன. ஸ்ரீமத் திருஞான சம்பந்தத் தம்பிரான் சுவாமிகள், எம். ஏ., எம்ஃபில்., திரு. இரா. சிவபுண்ணியம், பி.ஏ.,பி.எல்., திரு. எஸ். பாஸ்கரன், பி.ஏ.,பி.எல்., முனேவர். திரு. M. வரதராஜன், எம்.எஸ்ஸி..பிஎச்.டி., பேராசிரியர், திரு. இரா. இராமலிங்கம், எம்.ஏ., திரு.எஸ். இரத்தின. பாலசுப்பிர மணியன், எம். எஸ்ஸி., எம். இசட், எஸ்., முனேவர். திரு. மு. சிவச் சந்திரன், எம். ஏ., பிஎச். டி., முனேவர். திரு. மா. திருநாவுக்கரசு, எம். ஏ., எம். ஃபில்., பிஎச். டி., ஸ்ரீமத் மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள், எம்.ஏ., ஆகியோர் தொடக்கவுரையாற்றினர்; மேல்நிலேப் பள்ளி, கலேக்கல்லூரிஆசிரியர்கள் சிறப்புரையாற்றினர். ஸ்ரீகுருஞான சம்பந்தர் தொடக்கப்பள்ளி, ஸ்ரீ குருஞானசம்பந்தர் மேல்நிலேப்பள்ளி த. ஆ. க. கல்லூரி மாணவர்களின் கலேநிகழ்ச்சிகள் நிகழ்ந்தன.

## ஆதீனத் திருக்கோயில்களில் நவராத்திரி விழா

நவராத்திரி விழாவை முன்னிட்டுத் தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்கடவூர், திருபுவனம், சீகாழி, வேளூர், திருப் பனந்தாள், பேரளம் ஆகிய தலங்களில் 12—10—07 வெள்ளி முதல் 21—10—07 ஞாயிறு முடிய தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவுளப்பாங்கின்வண்ணம் உலக நலம் கருதி அம்பாளுக்கு அர்ச்சனேயும் விசேஷ அபிஷேக ஆராதனேகளும் நடை பெற்றன; 17—10—07 புதன், 18—10—07 வியாழன், 19—10—07 வெள்ளி ஆகிய நாட்களில் " மீனுட்சியம்மை பிள்ளேத்தமிழ் " என்ற தலேப்பில் விரிவுரைகள் நிகழ்ந்தன.

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி திருக்கோயிலில் முனேவர். திரு. சு. சுப்புரெத்தினம், எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி., வேளூர் ஸ்ரீவைத்திய நாதசுவாமி திருக்கோயிலில் திரு. மா. வேதகிரி, எம்.ஏ., எம்ஃபில்., திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி திருக்கோயிலில் திருமதி: சு. ஜெயலெட்சுமி, எம். ஏ., பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி திருக் கோயிலில் முனேவர். திருமதி. சிவ. ஆதிரை, எம்.ஏ.,பிஎச்.டி.பி.எட். திருபுவனம் ஸ்ரீகம்பகரேசுவரசுவாமி திருக்கோயிலில் முனேவர். திரு.

ச. சேகர், எம்.ஏ., எம்ஃபில்., பிஎச். டி., திருப்பனந்தாள் ஸ்ரீ அருண ஜடேசுவரசுவாமி திருக்கோயிலில் புலவர். திரு. இரா. மருதநாயகம் எம் ஏ., எம்ஃபில்., ஆகியோர் விரிவுரையாற்றினுர்கள்; அன்பர்கள் அம்பாளைத் தரிசித்தும் சொற்பொழிவைக்கேட்டும் பயன்பெற்றனர்.

## திருக்கடவூரில்
## ஸ்ரீ அபிராமி அம்மைக்குப் புஷ்பாஞ்சலி விழா

தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ அபிராமி அம்மை உடனுகிய ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி திருக்கோயிலில் ஸ்ரீ அபிராமி அம்மைக்கு ஆண்டுதோறும் நிகழ்த்தப்படுகின்ற புஷ்பாஞ்சலி வழிபாடு சர்வசித்து ஆண்டு ஐப்பசித்திங்கள் 4 ஆம் நாள் (21—10—07) ஞாயிற்றுக்கிழமையன்று (விஜயதசமி) மாலை ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி திருக்கோயிலின் அனைத்துப் பணியாளர்களின் உபயத்தால் நிகழ்த்தப்பெற்றது.

தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கியருளினுர்கள். அன்பர்கள் வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை
## ஸ்ரீ மௌனமடத்தில் ஸ்ரீ மௌனகுரு ஸ்ரீ தாயுமான சுவாமிகள் மாதாந்திரக் குருபூஜைத் திருநாள்

திருக்கயிலாயபரம்பரைத் தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான திருச்சிராப்பள்ளி ஸ்ரீ மௌன மடத்தில் ஸ்ரீ மௌனகுரு சுவாமிகள் ஸ்ரீதாயுமானசுவாமிகள் மாதாந்திரக்குருபூஜைத் திருநாள்சர்வசித்து ஆண்டு புராட்டாசித்திங்கள் 27 ஆம்நாள் (14—10—07) ஞாயிற்றுக் கிழமை விசாக நட்சத்திரத்தன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளப்பாங்கின் வண்ணம் மிகச் சிறப்பாக நடை பெற்றது. ஸ்ரீ மௌன மடத்தில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமிக்கும், மலைக்கோட்டை ஸ்ரீமாணிக்கவிநாயகருக்கும் ஸ்ரீஉச்சிப் பிள்ளையாருக்கும் ஸ்ரீ மட்டுவார்குழலம்மை உடனுகிய ஸ்ரீ தாயுமான சுவாமிக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் மௌன மடத்தில் நண்பகலில் மாகேசுவர பூசையும் நடைபெற்றன. வழிபாட்டினை, திருச்சி அன்பர் சிவத்திரு. அம்பலவாணன் மற்றும் கோயம்புத்தூர் அன்பர் சிவத்திரு. R. J. சுதாகர் ஆகியோர் ஏற்றுப்போற்றினர்.

## கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் குருபூஜை விழா

திருவாரூர் இராஜன்கட்டளைத் திருமடத்தில் 31—10—07 புதன் கிழமையன்று கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகளைத் திருமுறைப் பாராயணத்துடன் செய்தருளினார்கள்.

தருமைஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானமும் மதுரைஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் கொலு வீற்றிருந்து பக்தர்களுக்கு அருட்காட்சி வழங்கியருளினார்கள்.

முனைவர். திரு. கு. சுந்தரமூர்த்தி அனுட்டான அகவல், சிவபூசை அகவல்பற்றியும் முனைவர். திரு.எஸ். சுப்புரெத்தினம் சிவபோகசாரம் பற்றியும் திரு. வி. முருகன் ஞானப்பிரகாசமாலை பற்றியும் விரிவுரை ஆற்றினர்;

ஈரோடு சத்தீஷ் உள்ளிட்ட உறவினர்கள் மற்றும் பக்தர்களின் உபயமாகசெய்துகொடுத்தவெள்ளி அர்த்தசாம பல்லக்கு திருவீதிகள் வலம்வந்து, மாலையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் வழிபாட்டுக்கு எழுந்தருளியபோது, உடன் எடுத்துச்சென்று வழிபாட்டு நிறைவில் ஸ்ரீ தியாகேசர் ஸ்ரீ சுந்தரர் சந்நிதியில் திருக்கோயில் நிர்வாகி திரு. கஜேந்திரனிடம் ஒப்புவித்து ஆசியுரை வழங்கியருளினார்கள்.

மாலையில் திருக்கோயிலுக்கு எழுந்தருளி ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தை பூர்ணகும்ப மரியாதையுடன் வரவேற்றனர்கோயில் அதிகாரிகள்; ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீதியாகராஜாவுக்கு சாதரா அணிவிக்கச்செய்து முசுகுந்தார்ச்சனைசெய்வித்து வழிபாடாற்றினார்கள்;

சுவாமி அம்பாளுக்கு வஸ்திரம் அணிவித்தும் சித்தீசுவரத்தில் ஸ்ரீ மேதா தட்சிணாமூர்த்தி சந்நிதியில் எழுந்தருளி இருக்கும் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர், ஸ்ரீ குருஞானசம்பந்தருக்குப் பட்டு அணிவித்தும் வழிபாடாற்றினார்கள்; இராஜன்கட்டளை மடத்தில் கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கு சோடசஉபசார தீபாராதனை செய்வித்து அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள்; இரவு 9 மணியளவில் சிவிகையில் கமலை ஸ்ரீஞானப்பிரகாசர் திருவீதியுலா திருமுறை இசைவாணர்கள் திரு. S. திருஞானசம்பந்தன், திரு. S ஞானப்பிரகாசன், திரு. S. நடராசன், திரு. N. கணேசதேசிகர் ஆகியோரின் திருமுறைப் பாராயணத்துடனும் நாதசுவர இன்னிசையுடனும் வானவேடிக்கைகளுடனும் நடைபெற்றது.

சிவகாசிசிவனடியார், அறநெறிக்கழகத்தலைவர், Dr. K. ஜெயராஜன் மற்றும் உறுப்பினர்கள், மைதீன் கோவிந்தராசன், Dr. கோபால கிருஷ்ணன், வணிகர் சங்கத் தலைவர் அருள், தியாகபாரி, செந்தூர் பாரி. செயல் அலுவலர் கஜேந்திரன், R. M. P. R. சுந்தரமூர்த்தி, சீகாழி S. பாலசுப்பிரமணிய முதலியார், சீகாழி M. துரைராஜீபிள்ளை சீகாழி Dr. R. V. நாதன் (தங்குடு) தினமலர் ஜெயபால், தேசிக சமூகத்தினர் மற்றும் ஈரோடு, மதுரை, மயிலாடுதுறை அன்பர்கள் கலந்துகொண்டனர்.

## திருவாரூரில் குருவார வழிபாடு

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருளாணையின்வண்ணம் திருவாரூர் இராஜன்கட்டளை மடத்தில் வியாழக்கிழமைதோறும் காலை ஸ்ரீ ஞானப்பிரகாசருக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நண்பகல் மாகேசுவரபூஜையும் நடைபெற்று வருகின்றன. பிற்பகல் 3 மணியளவில் திருமுறைமுற்றோதல் விளக்கவுரையுடனும் மாலை 3 மணியளவில் பூங்கோயிலில் சுவாமி, அம்பாள் ஸ்ரீ தியாகராஜ சுவாமி, சித்தீசுவரம் ஸ்ரீ மேதா தட்சிணாமூர்த்தி சந்நிதிகளில் நெய் தீபத்துடன் அர்ச்சனையும் நடைபெற்றது. கட்டளைமடத்தில் முனைவர். திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் பெரியபுராண விரிவுரை நிகழ்த்தினர். பக்தர்கள்பலர்கலந்துகொண்டுதரிசித்தும்சொற்பொழிவைக்கேட்டும் பயன்பெற்றனர்.

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்
## மாதாந்திரக் குருபூஜைத் திருநாள்

தருமை ஆதீன முதற்குருமணிகள் ஸ்ரீ குருஞானசம்பந்தரின் மாதாந்திரக் குருபூஜைத் திருநாள் (கிருஷ்ணபட்சம் சப்தமிதிதி) சர்வசித்து ஆண்டு ஐப்பசித்திங்கள் 15 ஆம் நாள் (1—11—07) வியாழக்கிழமையன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளப் பாங்கின்வண்ணம் தருமபுரத்தில் மிகச் சிறப்பாக நிகழ்ந்தது.

காலையில் மேலக்கோயில் ஸ்ரீ ஞானாம்பிகை உடனுகிய ஸ்ரீஞான புரீசுவரசுவாமிக்கு சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நிகழ்ந்தன. தொடர்ந்து பூஜைமடத்தில் ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கும் ஸ்ரீ குருஞானசம்பந்தருக்கும் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருக்கரங்களால் செய்யப்பெற்று மாகேஸ்வர பூஜையும் நிகழ்ந்தன. இவ்வழிபாட்டினை ஈரோடு அன்பர் சிவத்திரு. S. சசிகுமார் ஏற்றுப்போற்றினர்; அன்பர்கள்பலர் வழிபட்டுப் பயன் எய்தினர்.

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் 36 ஆம் ஆண்டுக் குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனத்தின் 25 ஆவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து 26½ ஆண்டுகள் அருள் ஆட்சி செய்தருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் 36 ஆம் ஆண்டுக்குருபூஜைவிழா சர்வசித்து ஆண்டு ஐப்பசித்திங்கள் 16 ஆம் நாள் (2—11—07) வெள்ளிக்கிழமையன்று குருமூர்த்த ஆலயத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

காலையில் திருமுறை இசையரங்கிற்குப் பிறகு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருள் வரலாற்றில் திகழும் ''சமய சமூக நலன்கள்' என்ற தலைப்பில் கருத்தரங்கம் நிகழ்ந்தது. வித்துவான். திரு. வி சா. குருசாமி தேசிகர் ''சமயம்'' என்ற தலைப்பிலும், முனைவர். திரு. மா. திருநாவுக்கரசு ''கல்வி'' என்ற தலைப்பிலும், திரு. இரா. செல்வ நாயகம் ''இலக்கியம்'' என்றதலைப்பிலும், புலவர். திரு. கே. கணபதி ''சமூகம்'' என்ற தலைப்பிலும் விரிவுரையாற்றினர்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபாடாற்றி னார்கள்; த. ஆ. க. கல்லூரி செயலர், திரு. R. பாலசுப்பிரமணியன், செம்பை திரு. S. இரத்தினசாமி உடையார், மயிலாடுதுறை டாக்டர். திரு. நாராயணன், A. V. C. தொழில் நுட்பக் கல்லூரி முதல்வர் திரு. S. பாலசுப்பிரமணியன் ஆகியோர் வழிபாட்டில் கலந்துகொண்டனர்.

நண்பகல் மாகேசுவரபூசை நிகழ்ந்தது; மாலை 7 மணியளவில் திருமுறைக் கலாநிதிகள் திரு. S. திருஞானசம்பந்தம், திரு. S. நடராஜன் குழுவினரின் திருமுறை இசையரங்கிற்குப் பிறகு இன்றைய சமுதாயம் சீரியவளர்ச்சி அடைவதற்குப் பெரிதும் தேவை கல்வியா? செல்வமா? என்ற தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது;

'' கல்வியே '' என்ற அணியில், முனைவர். திரு. க. சேகர், திரு. வீ. முருகன், திருமதி. சு. ஜெயலெட்சுமி ஆகியோர் வாதிட்டனர். ' செல்வமே '' என்ற அணியில், புலவர். திரு. இரா. மருதநாயகம், திரு. மா. வேதகிரி, முனைவர். திருமதி. சிவ. ஆதிரை ஆகியோர் வாதிட்டனர்.

த ஆ க. கல்லூரி, முன்னைத் தமிழ்த்துறைத்தலைவர், முனைவர். திரு,மு. சிவச்சந்திரன், எம்.ஏ.,பிஎச்.டி., நடுவராகப் பொறுப்புஏற்று இன்றைய சமுதாயம் சீரியவளர்ச்சி அடைவதற்குப் பெரிதும்தேவை '' கல்வியே '' எனத் தீர்ப்பளித்தார்,

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபாடாற்றி அனைவர்க்கும் குருவருள் பிரசாதமும் ஆசியுரையும் வழங்கியருளினார்கள்; மயிலாடுதுறை அன்பர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

## ஞானபீடம் அமர்ந்தநாள்

தருமை ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் அவர்கள் ஞானபீடம் அமர்ந்தநாள் சர்வசித்துஆண்டு ஐப்பசித்திங்கள் 19ஆம் நாள் (5—11—07) திங்கட்கிழமை அன்று மிகச்சிறப்பாக நிகழ்ந்தது; ஸ்ரீ ஞானம்பிகை உடனாகிய ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்கு பன்னிரு திருமுறைப்பாராயணத்துடன் ருத்ராபிஷேகம் நிகழ்ந்தது; ஸ்ரீதுர்க்கா பரமேசுவரி சந்நிதியில் அபிராமி அந்தாதி பாராயணமும் நிகழ்ந்தது; ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள்; அன்பர்கள்பலர் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

## சென்னை சமயப் பிரசார நிலையத்தில்

நவராத்திரி விழா :- நிலையத்தில் 12—10—07 வெள்ளி முதல் 20—10—07 சனிக்கிழமை முடிய நவராத்திரி விழா மிகச் சிறப்பாக நிகழ்ந்தது.

12-10-07 அன்று டாக்டர் திருமதி தன்வந்தரி சுப்பிரமணியன் அவர்கள் திருவிளக்கு ஏற்றி வைத்தார்கள். ஸ்டெர்லிங் ஹாலிடே ரிசார்ட்ஸ் மேலாண்மை இயக்குநர் திரு R. சுப்பிரமணியன் தொடக்கவுரை ஆற்றினார்கள்.

தருமை ஆதீனபத்திமை பாடற்குழுவினர், திருமதி. கீதாசேது நாராயணன், திருமதி. பத்மா, திருமதி. பூஜா, திருமதி. சரஸ்வதி சந்திரசேகரன், செல்வன் சரஜ், புலவர்கள் சோமசுந்தரதேசிகர். ந. இராமலிங்கம், திருமதி. சுதா வரதராஜன், செல்வி. பிரேமலதா திருமதி. மாலினிகுமார், திரு. பா. சற்குருநாதன், திரு. V. முத்துக் குமாரசாமி ஆகியோர் ஒவ்வொருநாளும் இன்னிசைவழங்க, திரு K. சுப்பிரமணியன், திரு. K. சிவக்குமார், திரு. V. சேகர், திரு. M, மணிவாசகம், திரு. பனசைமூர்த்தி, திரு. அருணா செல்விபிரிய தர்ஷினி ஆகியோர் ஒவ்வொருநாளில் சொற்பொழிவாற்றினர். அன்பர்கள் பலர் கலந்துகொண்டு பயன் எய்தினர்.

திருமுறை முற்றோதல் :- நிலையத்தில் 14—10—07 ஞாயிறன்று ஸ்ரீ நடராஜர், ஸ்ரீசமயாசாரியர் திருஉருவப்படங்களை மலர்ப்பந்தலில் எழுந்தருளச் செய்து திருமுறைப் பாராயணத்துடன் முற்றோதல்

நடைபெற்றது. அப்பர் சுவாமிகள் அருளிய 4 ஆம் திருமுறையில் பொதுப் பதிகத்தை திருமதி. விஜயலட்சுமி இராகவன் இசைக்க, முனைவர். திரு. மு. சிவச்சந்திரன் விளக்கவுரையாற்றினர். அரனருள் அமைப்பினர் ஏற்றுப்போற்றினர். அன்பர்கள் பலர் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

மாதாந்திர வழிபாடு :- மயிலாப்பூர் ஸ்ரீ அக்னீசுரசுவாமி திருக்கோயிலில் 28—10—07 ஞாயிறன்று காலை விசேஷ அபிஷே ஆராதனைகளுடனும் திருமுறைப் பாராயணத்துடனும் மாதாந்திர வழிபாடு நடைபெற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருநாம நட்சத்திரத்திற்குச் சங்கல்பம்செய்து அர்ச்சனை செய்யப்பெற்றது. கண்காணிப்பாளர் திரு. சு. மு. சுந்தர்ராஜன் சமயசிந்தனை வழங்கினர். மயிலாப்பூர் திரு. சுந்தரம்பிள்ளை அன்னம்பாலிப்பை ஏற்றார். திரு. ஆறுமுகம்செட்டியாரும், திரு தருமைதாசன் குடும்பத்தினரும் வழிபாட்டிற்குரியதை ஏற்றுப்போற்றினர். பக்தர்கள் பலர் கலந்து கொண்டு பயன்பெற்றனர்.

கார்த்திகைபிரசாதம் வழங்கும் விழா :- நிலையத்தில் 29—10—07 ஞாயிறன்று மாலை ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி திருஉருவப்படத்தினைப் மலர்ப்பந்தலில் எழுந்தருளச்செய்து திருமுறைப்பாராயணத்துடன் கார்த்திகைப் பிரசாதம் வழங்கும் விழா நடைபெற்றது வெள்ளிமணி ஆசிரியர் சிவஸ்ரீசிவா சிறப்புரையாற்றினர். கலந்து கொண்ட அன்பர்களுக்கு பிரசாதங்கள் வழங்கப்பெற்றன.

கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் குருபூஜை :- நிலையத்தில் 31-10-07 புதனன்று கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் குருபூஜை வழிபாடு சிவபோக சாரம், சொக்கநாதவெண்பா பாராயணத்துடன்நிகழ்ந்தது. சென்னை ஓய்வுபெற்ற துணைத்தலைமையாசிரியர் புலவர். திரு.N. இராமலிங்கம் சிறப்புரை ஆற்றினர். வழிபாட்டினை திருமதி. விஜயலட்சுமி கோபாலகிருஷ்ண நிறுவியுள்ள அறக்கட்டளையினர் ஏற்றுப் போற்றினர்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி குருபூஜை :- ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி இறுதியாக வழிபாடாற்றிய மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீஸ்வரர் திருக்கோயிலில் 2—11—07 அன்று தருமை ஆதீனத்தின் சார்பில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் வழிபாடுநடைபெற்றது. மாலை 6 மணிக்கு நிலையத்தில் செல்வி. பிரேமலதா திருமதி. மாலினிகுமார் ஆகியோர் இன்னிசை வழங்க, இன்னிசைக் கதைவாணி திருமதி. கௌரி இராஜகோபால் இன்னிசைவிரிவுரை ஆற்றினர். அன்பர்கள் பலர் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

# "ஞானசம்பந்தம்"

# 66 ஆம் ஆண்டு மலர்ப் பொருளடக்கம்

REGISTERED AS NEWSPAPER
REGISTERD SP / MYL 01 / 2006-08
REGISTER NO. T. N. N. Q. 58
LICENSED TO POST WITHOUT PREPAYMENT

# ஞானசம்பந்தம்

Date of Posting : 20-11-2007
Posted at Head Post Office, Mayiladuthurai.

சமய இலக்கியத் திங்கள் இதழ்

சந்தா விபரம்

| | | உள்நாடு | | வெளிநாடு |
|---|---|---|---|---|
| ஆண்டுச் சந்தா .... | ரூ. | 50—00 | ரூ. | 275—00 |
| ஆயுள் சந்தா ... | ரூ. | 500—00 | ரூ. | 2750—00 |
| தனிப்பிரதி ... | ரூ. | 5—00 | | |

தொகை அனுப்பவேண்டிய முகவரி:-
செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மயிலாடுதுறை - 609 001.
நாகை மாவட்டம்.

பெறுநர்.
திரு / திருமதி

நூல் - அஞ்சல்




822 என். திருநாவுக்கரசு
" அப்பர் அருளகம் "
19, சர்ச் நான்காம்வீதி
T. T. நகர், காரைக்குடி 630 001

Printed & Published by K. Shanmugasundaram Supdt. Dharmapuram Adhinam Dharmapuram at the Gnanasambandam Press Dharmapuram. Mayiladuthurai - 609001